# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN ):978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 34 திருவள்ளுவர் ஆண்டு 2054 மார்ச்சு –2023


## உள்ளே...











# கால்நடைப் பராமரிப்புத் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Anaesthesia | – | உணர்விழப்பு |
| Anthrax | – | அடைப்பான் |
| Beef cattle | – | ஊன் மாட்டினம் |
| Black quarter | – | சப்பை நோய் |
| Cattle insurance | – | ஆவினங்கள் காப்பீடு |
| Grower farms | – | வளர்ப்புப் பண்ணைகள் |
| Mashfeed | – | கலப்பு உணா |
| Mastitis | – | மடி வீக்க நோய் |
| Morphology | – | விலங்கு வடிவ அமைப்பியல் |
| Pack animal | – | பொறி விலங்கு |
| Pack horse | – | பொறி குதிரை |
| Patient | – | நோயுற்ற விலங்கு |
| Percuss | – | விரலால் தட்டி நோய் ஆராய்தல் |
| Phylum | – | விலங்குகளின் இனப் பிரிவு |
| Pigsty | – | பன்றிக் கொட்டில் |
| Pollard | – | மோழை விலங்கு |
| Poultry | – | கோழி இன வளர்ப்புப் பறவைகள் |
| Poult | – | வான்கோழிக் குஞ்சு |
| Probang | – | தொண்டை அடைப்பு அறி கருவி |
| Prognosis | – | நோய்நிலை முன்கணிப்பு |
| Quailery | – | காடைப் பண்ணை |
| Rinderpest | – | வெக்கை நோய் |
| Row goat | – | மலையாடு |
| Tick fever | – | உண்ணிக் காய்ச்சல் |
| Urticaria | – | தோல் அரிப்பு நோய் |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2054 கும்பம் (மாசி)
மார்ச்சு – 2023

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கஸ்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
கட்டணமில்லா அலைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Toll free : 14469
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# சொல்லின் வளம் சொன்னால் நலம்!

பொருள்வளம், சுவை வளம், சொல்வளம் என எதிலும் குறை காணமுடியாத மொழி தமிழ்மொழி. அதில் கலைச்சொல் என்பது சொற்சிக்கனம், பொருள் ஆழம், துல்லியம், சுருக்கம்,தெளிவு என ஒருங்கமைதல் வேண்டும். தமிழறிஞர் தேவநேயப் பாவாணர் குறிப்பிட்டதுபோல உலகின் முதன்மொழி தமிழ்மொழியாகும். தமிழைத் தாய்மொழியாகப் பெற்றதற்கே தமிழர்கள் யாவரும் பெருமைகொள்ள வேண்டும்.

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்

இனிதாவது எங்கும் காணோம்"

– மகாகவி பாரதியார்

தமிழ்மொழி மிகவும் நுட்பம் வாய்ந்தது. தமிழில் ஒரு புள்ளிக்குக்கூட மதிப்பு உண்டு. கல்வி என்பதைப் புள்ளி இல்லாமல் எழுதினால் அதன் பொருளே மாறிவிடும். எனவே தமிழ்மொழியை மிகக் கவனமாகக் கையாள வேண்டும். "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்பதற்கு ஏற்ப ஒவ்வொரு சொல்லும் ஓர் பொருளைக் குறித்தே உருவாகிறது. மொழியின் உயிர்நாடி சொற்கள் ஆகும்.

சொல்லாத சொல்லுக்கு விலையேதும் இல்லை என்பர். கேட்பவரை மட்டுமல்ல கேட்க விரும்பாதவரையும் தன் வயப்படுத்த வல்லது சொல். சொற்கள் என்ன செய்யும் என நாம் அலட்சியப்படுத்தக் கூடாது. சில சொற்கள் நம்மை வாழவைக்கும்; சில சொற்கள் வீழவைக்கும்; சில சொற்கள் அழவைக்கும். அதனால்தான் நெல்லைக் கொட்டினால்கூட அள்ளலாம்; சொல்லைக் கொட்டினால் அள்ள முடியாது என்றனர். வள்ளுவப் பெருந்தகையும், "சொல்லற்க சொல்லில் பயனிலாச் சொல்" என்றார். பயனிலாச் சொல் எனப் பட்டியலிடும்போது பயன்மிக்க சொற்களை நாம் அறிய முயல வேண்டும்.

வளம்மிக்க நலம் பயக்கும் சொல் என்பது எவ்விதம் இருக்கும்?

இராமாயணத்தில் ஒரு காட்சி. அசோகவனத்தில் சீதையைக் கண்டு திரும்பும் அனுமன் இராமனைக் கண்டு வணங்கி, "கண்டேன் கற்பினுக் கணியினை" என்றார். கற்பினுக் கணியினைக் கண்டேன் என்று ஏன் கூறவில்லை? கற்பினுக் கணியினை என்று சொல்லி அடுத்த சொல் சொல்வதற்குள் இராமபிரானின் மனம் என்ன துயருறுமோ என்று எண்ணி அவர் மனம் மகிழும் சொல்லான கண்டேன் என்ற சொல்லை அனுமன் முதலில் பயன்படுத்துகிறார். இதுவன்றோ சொல்லும் விதம்!

நல்ல சொற்கள் நல்ல அதிர்வை ஏற்படுத்தும். நம்மை யாரென்று அடையாளப்படுத்துவது நாம் பேசும் சொற்கள்தான். விவேகானந்தரை அன்பிற்குரிய மனிதராக இவ்வுலகுக்கு அடையாளம் காட்டியது சகோதர / சகோதரிகளே என்ற சொற்கள் தான். நம்மைப் பற்றிய சிறந்த அறிமுகத்தை நம் சொற்களே தருகின்றன.

உயிர் எனக் கொள்ளும் போதே உறவு என்பது உடன் வருகிறது. aunty, ungle, mam, sister, bro, boss என உணர்ச்சியற்ற இச்சொற்கள் எதற்கு? உறவைக் குறிக்க, உணவைக் குறிக்க, மரம், செடி, கொடி, பறவை, விலங்கு, தொழில் என அத்தனைக்கும் செழுந்தமிழ்ச் சொற்கள் உள்ளன. சொல்லின் வளத்தை இத்தலைமுறையினருக்கும் சொன்னால்தானே நலம் பயக்கும்.

## தமிழர் பரம்பரை

| | |
|---|---|
| பரன் | பரை |
| சேயோன் | சேயோள் |
| ஓட்டன் | ஓட்டி |
| பூட்டன் | பூட்டி |
| பாட்டன் | பாட்டி |
| தந்தை | தாய் |

நாம்

| | |
|---|---|
| மகன் | மகள் |
| பெயரன் | பெயர்த்தி |
| கொள்ளுப்பெயரன் | கொள்ளுப்பெயர்த்தி |
| எள்ளுப் பெயரன் | எள்ளுப் பெயர்த்தி |

பெற்றோர் – இருமுது குரவர்

மூதாளர் – முதியவர்

பரம்பரை – ஈரேழு தலைமுறை

என உறவுக்கு எத்தனையோ சொற்கள் உள்ளன.

உணவு வழங்கும் போது அவ்வுணவு வகைகளுக்கான மாறுபட்ட பெயர்களும் அதன் பொருளும்.

- அமிழ்தம் – தேவருணவு
- ஆர்பதம் – வயிராரச் சுவைத்துண்ணும் உணவு
- அல்கிரை – விலங்கின் உணவு
- பலி – காக்கைக்கு இடும் உணவு
- மடை – கடவுளுக்கான படையல்

உண்ணுகின்ற உணவைக் குறிக்கும் சொல் அவிழ்பதம். அதாவது பதமாக வெந்து நிற்பதைக் குறிக்கும். அவிழ்தல் என்றால் பல பொருள்கள் உண்டு. மலர்தல், விரிதல், விடுபடல். இங்கே சோறு, அரிசி எனும் நிலையில் இருந்து மாறி நீரில் வெந்து மலர்வதை அழகாக அவிழ்பதம் என்ற சொல்லால் குறிப்பிடுகிறோம்.

பயிரிகள் (தாவர), விலங்குகள் என வரும்போது நெற்பயிர் இலைகள் – தாள், கரும்புச் செடி இலைகள் – தோகை, தென்னை, பனை மர இலைகள் – ஓலை என்றும், தாழை இலைகள் மடல் என்றும் கூறப்படும். அதேபோல் பூவின் நிலைகளைக் கூறும்போது,

பூ, அரும்பு, போது, மலர்

மலராத பூவோ மொட்டு, முகை, மொக்குள் என்கிறோம்.

காய்– பிஞ்சு – காய் – செங்காய் – பழம், கனி (உருவாதல்)

பிஞ்சு வகைகளில் குரும்பை, வடு, மூசு, கச்சல் எனப் பொருள்படும்

| | |
|---|---|
| வாழைப் பிஞ்சு | கச்சல் |
| மாங்காய்ப் பிஞ்சு | வடு |
| தேங்காய்ப் பிஞ்சு | குரும்பை |
| இளங்காய் | மூசு |

பயிரிகளின் (தாவரங்களின்) இளமைப் பெயர்களாக நெல் – நாற்று, பனை – வடலி, தென்னை – கன்று/ பிள்ளை, புகையிலை – நாற்று என்ற சொற்களாலும்,

அரிமா (சிங்கம்) – குருளை, யானை – கன்று, கீரி – பிள்ளை, மான் – கன்று, தவளை – பேத்தை, கிளி – பிள்ளை எனவும் அதற்கே அமைந்த மரபுச் சொற்களால் தொல்காப்பியவழி நம் முன்னோர்கள் வழங்கினர்.

வாழும் பகுதிக்குக்கூட பொருள் பொதிந்த பெயர்களைக் காரணத்துடன் வழங்கிய அறிவார்ந்த இனம் தமிழினம். திருநெல்வேலிக்கு அருகில் உடன்குடி

செல்லும் வழியில் உள்ள ஒரு சிற்றூர் "எழுவரைமுக்கி". பெயரே கதை சொல்கிறது அல்லவா!. அதுதான் நம் தாய்மொழி. தாமிரபரணியாறு பரந்தோடும் நெல்லைச் சீமையின் கரையோரச் சிற்றூர் அது. தரையில் சில அடிகள் தோண்டினாலே தண்ணீர் பெருக்கெடுத்து ஓடும். இயற்கைவளம் கொழிக்கும் இந்தச் சிற்றூரில் கன்னிப்பெண்கள் எழுவர், தோழியர் கூட்டமாக நீராடச் சென்றனர். நேரம் போவதே தெரியாமல் நீராடிக் கொண்டிருக்கையில் அவ்வழி வந்த ஆடு மேய்க்கும் இளைஞன் குறும்பாக, கரையில் இருந்த அவர்களின் உடைகளை எடுத்துக்கொண்டு சென்றுவிட, கரையேற முடியாமல் கலங்கிய அப்பெண்கள் ஊருணிக்குள் மூழ்கினார்கள். அங்கேயே தெய்வமானார்கள். அந்த ஊர் இன்றளவும் எழுவரைமுக்கி என்ற பெயராலேயே வழங்கப்படுகிறது.

பொருளற்ற வெற்றுச் சொற்கள் தமிழ்மொழியில் இல்லை. அன்னைத்தமிழாம் அருந்தமிழின் சொல்வளம் சேர்க்கும் சொற்களை இளம்தலைமுறையினருக்குக் கொண்டுசேர்ப்பது நம் பணியாகும்.

"கடை விரித்தேன் கொள்வாரில்லை" என்றார் வள்ளலாரடிகள். தமிழன்னையின் திருக்கைகளில் அமுதசுரபி போல் ஆயிரமாயிரம், இலட்சலட்சம் சொற்கள் இருக்கின்றன. அவற்றைப் பயன்படுத்துவது நமக்குப் பேறு. மொழியை உயிராய் நேசிப்போம்... தமிழால் இணைவோம். நிற்க.

மொழிக்காப்பு ஆவணங்களான அகராதிகளைக் காலத்திற்கேற்ற பொருண்மைகளில் உருவாக்கி வெளியிட்டுவரும் இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "திராவிடத் தமிழும் இலத்தீனியப் பிரெஞ்சும்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், பென்சில்வேனியா பல்கலைக்கழகப் பேராசிரியர் வாசு ரெங்கநாதன் அவர்களின், "Tracing the Trajectory of Linguistic changes in Tamil: Mining the corpus of Tamil Texts" என்னும் ஆங்கிலக் கட்டுரையும், ஸ்ரீ இராமசாமி நாயுடு நினைவுக்கல்லூரியைச் சேர்ந்த ஆய்வு நெறியாளர் மூ. கவிதா (ம) முனைவர் பட்ட ஆய்வாளர் ப. இரதிதேவி ஆகியோர் இணைந்து எழுதியுள்ள, "தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள்" எனும் தலைப்பிலான கட்டுரையும், இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

தனிமைச் சுவையுடைய சொல்லை – எங்கள்
தமிழினும் வேறெங்கும் யாம் கண்டதில்லை!

–புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

# திராவிடத் தமிழும் இலத்தீனியப் பிரெஞ்சும்

"மொழியானது மக்களின் மனம்
மனம் என்பது மக்களின் மனம்
Ihre Sprache ist irgeist und
Ihr Geist ihre Sprache – Herde



முனைவர், பேராசிரியர் ச.சச்சிதானந்தம்
இயக்குநர் : பன்னாட்டு உயர்கல்வி
தமிழாய்வு நிறுவனம், பாரிசு

மனிதனின் கண்டுபிடிப்புகளில் உயர்வானது அறிவின் வெளிப்பாடான மொழி. மனிதனின் உறுப்புகளில் மிகப்பயன்பாடானது சிந்தனைப் பெட்டியான மூளை. உடலின் மூழு நிறையில் 2.5 விழுக்காடு நிறையுடைய அந்த மூளை பல தலைமுறைகளாகப் பெற்ற வளர்ச்சி எல்லாம் மனித குலத்தைப் படிப்படியாக முன்னேற்றிய மொழியில்தான் இருக்கிறது. உலகில் பல மொழிகள் உள்ளன. தற்போது 6912 மொழிகள் (100 %) வழங்கப்படுகின்றன என்றும், அவற்றில் 2269 மொழிகள் (32.7%) ஆசியாவிலும், 2092 மொழி கள் (30.3%) ஆபிரிக்காவிலும், 1310 (19.0%) பசுபிக்கிலும், 1002 (14.5%)அமெரிக்காவிலும், 239 (3.5%) ஐரோப்பாவிலும் பேசப்படுகின்றன என்று அமெரிக்க நிறுவனமான Summer Institute of Linguistics கூறுகிறது.

மொழிகளுக்கிடையிலான ஒற்றுமை – வேற்றுமை அடிப்படையில் மொழிகள் எல்லாம் குடும்பங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இனத்தொடர்பினைக் காட்டும் மொழிகள் அனைத்தையும் ஒற்றுமைப்படுத்தி ஆராயும் போது, அவற்றுக்கு எல்லாம் தாயாக மூலமொழியாக ஒன்று இருந்திருத்தல் வேண்டும். இம்மூலமொழி தொல்மொழி (Proto language) என அழைக்கப்படும் என மொழியியல் ஆய்வாளர்கள் – குறிப்பாக Merritt Ruhlen அவர்கள் The Origin of Language என்ற நூலில் 1994 இலும், மொழியியலின் பள்ளி (School of Linguistics) என அழைக்கப்படும் முனைவர் ச.அகத்தியலிங்கம் அவர்கள் திராவிட மொழிகள் என்ற நூலில் 1999 இலிலும் குறிப்பிட்டுள்ளனர். இக்கருத்திற்கு உடன்படாத மொழியியலாளர்களும் உண்டு, குறிப்பாக பிரெஞ்சு மொழியியலாளர்கள் Claude Hagège (Collège de France), Louis – Jean Boè உம், அகழ்வாராய்ச்சியாளர் Jean – Paul Demoule உம், தொல்–வரலாற்றியலறிஞர் Francesco d'Errico போன்றவர்களும் குறிப்பிடத்தக்கவர்கள்.

உலகமொழிகளைப் பேசுவோர் கணக்கடிப்படையில், திராவிட மொழிகளை 4 விழுக்காட்டினரும், இந்தோ – ஐரோப்பிய மொழிகளை 43.5 விழுக்காட்டினரும் உள்ளனர் என Ethnologue, Languages of the World (Dallas 1999) தகவல் தருகிறது. உலகில் தமிழ் பேசுவோர்களின் எண்ணிக்கை 77 மில்லியன். பிரெஞ்சு பேசுவோர்களின் எண் ணிக்கை 200 மில்லியன். தென்னிந்திய மொழிகளில் உயர் தனிச்செம்மொழியாக மேன்மை பெற்றுத் திகழும் தமிழ், 23 மொழிகளைக் கொண்ட திராவிடமொழிக் குடும்பத்தில் தென்திராவிடப்பிரிவைச் சார்ந்தது. இரண்டாவது சர்வதேச

மொழியாகவும் நாகரிகமொழி யாகவும் இலங்கும் பிரெஞ்சு 430 மொழிகளைக்கொண்ட இந்தோ – ஐரோப்பிய மொழிக் குடும்பத்தில் இலத்தீனிய (ரோமானிய) ப்பிரிவையும் சார்ந்தது.

**மொழிக்குடும்பங்களும் பேசுவோர் தொகையும்**

| மொழிக் குடும்பங்கள் Langues par familles | பேசுவோர் தொகை (%) Poids en locuteurs | மொழிக் குடும்பம்(%) Familles linguistiques |
|---|---|---|
| இந்தோ - ஐரோப்பியம் Indo - européen | 43,50% | 6,30% |
| உராலோ- அல்டாய்க் Ouralo -altaique | 6% | 1,50% |
| சீன - திபெத்தியம் Sino –tibétain | 21% | 5,50% |
| ஆஸ்திரிக் Austrique | 7,50% | 23% |
| திராவிடம் Dravidien | 4% | 1,20% |
| ஆப்பிரிக்க - ஆசியம் Afro - asiatique | 7% | 5,50% |
| ஆப்பிரிக்கம் Africain | 10% | 25% |
| பிற Autres | 1% | 32% |




## திராவிடமும் இலத்தீனியமும்

மொழி என்பது இயற்கையில் பண்பாட்டின் அடித்தளம். ஒவ்வொரு மொழிக்கும் ஒரு பண்பாடு இருக்கிறது. திராவிடம் என்பது இந்தியாவின் தென்னாட்டு மொழிகளையும் மக்களையும் சுட்டுகிறது. மொழிகளைக் குறிப்பதற்கு இச்சொல்லைத் திராவிட மொழிகளை ஆழ்ந்தகன்று ஆராய்ந்த அறிஞர் கால்டுவெல் கையாண்டார். சிந்துவெளி நாகரிகம். மொகஞ்சதாரோ, கரப்பா நாகரிகங்களை ஏற்படுத்திச் சிந்து – பஞ்சாப் பள்ளத்தாக்குகளில் நாகரிகத்தோடு வாழ்ந்துவந்த திராவிடர்களை இந்தியாவுக்குள் நுழைந்த ஆரியர்கள் தென்பகுதிகளுக்கு துரத்தியடித்தனர் என்பது வரலாறு. பின்னர் திராவிடப் பண்பாட்டியலில் சமஸ்கிருதப்பண்பாடு ஊடுருவிக் கலப்புப் பண்பாட்டை ஏற்படுத்தியது.

தமிழ் திராவிட மொழி. தொல்திராவிடத்திலிருந்து வந்த தமிழ் திராவிடக்குடும்பத்து மொழி. சில அறிஞர்கள் திராவிட மொழிகள் 27 எனச் சொல்வார்கள். இன்னும் சிலர் 25

| தொல்மொழி | தொல்திராவிடம் | தொல் ஐரோப்பியம் |
|---|---|---|
| மொழிக்குடும்பம் | தென்திராவிடம் | இலத்தீன் (ரோமானியம்) |
| மொழி | தமிழ் | பிரெஞ்சு |

என்பார்கள். ஆனால், இரட்டை முனைவரான ச. அகத்தியலிங்கம் அவர்கள் தமது மொழியியல் நூல்களில் திராவிட மொழிகள் 23 எனச் சொல்வார். திராவிடக்குடும்பத்து மொழிகள் தென் திராவிட மொழிகள், நடுத்திராவிடமொழிகள், வடதிராவிட மொழிகள் என மூன்று வகைப்பாடு செய்யப்பட்டுள்ளன.

## திராவிட மொழிகள்

| தென் திராவிட மொழிகள் | நடுத்திராவிட மொழிகள் | வடதிராவிட மொழிகள் |
|---|---|---|
| தமிழ், மலையாளம், கன்னடம், குடகு, துளு, தோடா... | தெலுங்கு, கோண்டி, கோயா, கூயி, நாயக்கி, ஐதபு... | குருக், மால்தோ,பிராகுய்... |

முற்காலத்தில் ரோம் பிரதேசப் பகுதியில் பேசப்பட்ட மொழி இலத்தீன்(Latin). இம்மொழி பேசப்பட்ட பிரதேசம் இலத்தியம் (Latium), மொழி பேசிய மக்கள் இலத்தீனர் (Latins). பின்னர் இவர்களுடன் ஒம்பிறியென்(Ombriens), வொல்ஸ்க்(Volsques) அல்லது சம்னித் (Samnites) மக்களும் இணைந்து கொண்டனர். இவர்களே ரோமானியர் (Romains)அல்லது இத்தலிக்கினர் (Italiques) எனப் பெயர்கொண்டனர். இவர்களைத் தொடர்ந்து கிரேக்கர், செல்த்தியெர், ஜெர்மானியர், ஸ்லாவியர் என்ற மக்களும் ஐரோப்பாவுக்கு வந்தடைந்தனர். இவர்களும் மத்திய கிழக்காசிய மக்களும் இந்திய ஆரியர்களும் ஒரே மூதாதையரைக் கொண்டிருக்க வேண்டும் என்ற கருதுகோள் நிலவியதால், இவர்கள் இந்தோ – ஐரோப்பிய மக்கள் எனப்பட்டனர். இவர்களின் மொழிகள் இந்தோ – ஐரோப்பிய மொழிகள் என அழைக்கப்பட்டன.

இதன் கரணியமாகத்தான் பிரெஞ்சு இலத்தீனிய (ரோமானிய) மொழி எனப்படுகிறது. இலத்தீனிலிருந்து வந்த பிரெஞ்சு இந்தோ – ஐரோப்பியக் குடும்பத்து மொழி. ரோமானியச் சாம்ராச்சியம் கொடிகட்டிப்பறந்த நாடுகளில் இலத்தீன்மொழியை வெற்றி கொண்ட நாட்டு

மக்களுக்குத் திணித்தனர். இந்த இராச்சியம் எதிரிகளின் படையெடுப்புகளினால் நொறுங்கிப் போனது. நொறுங்கிய ரோமானிய இராச்சியம் புதுநாடுகளாக உருவாகின. ஒன்றிய இலத்தீன் மொழியும் பிரிந்து, இத்தாலியம், பிரெஞ்சு, இஸ்பானியம், கத்தலன், போர்த்துக்கேயம் ஒசித்தான், ரூமேனியம், கலிஸியென், புரோவன்ஸால் எனும் மொழிகளைத் தந்தது.




மலையாளம், தெலுங்கு, கன்னடம் முதலானவை தமிழின் திருந்திய – நெருங்கிய சகோதர மொழிகள். அதேபோல் இத்தாலியம், இஸ்பானியம், போர்த்துக்கேயம், ஆகியன பிரெஞ்சின் திருந்திய – நெருங்கிய சகோதர மொழிகள். ஒரு தாய் வயிற்று மக்கள் போன்று பல்வேறு மொழிப்பண்புகளில் தம்முள் தொடர்பு கொண்டவை. ஒலியியல், ஒலியனியல், சொல்லியல். தொடரியல், சொற்களஞ்சியம், பொருண்மையியல் போன்ற பலபண்புகளில் இவை நெருங்கிய தொடர்பு கொண்டவை. (அகத்தியலிங்கம – இந்தியமொழிகள் : பக்கம் 49).

| தமிழ் | மலையாளம் | கன்னடம் | தெலுங்கு |
|---|---|---|---|
| நான், யான் | ஞான் | நானு | நேனு |
| நான்கு, நாலு | நாலு | நால்கு | நாலுகு |
| கண் | கண்ணு | கண்ணு | கண்ணு |

| Français (பிரெஞ்சு) | italien( இத்தாலியம்) | espagnol( ஸ்பானியம் | portugais (போர்த்துக்கேயம்) |
|---|---|---|---|
| un | Un, uno | Un,un | Um |
| pain | pane | Pan | Pao |
| langue | lingua | lengua | Lingua |

## தமிழும் பிரெஞ்சும்

தமிழர் தம்மொழியை தாய் எனப்
போற்றுகின்றனர்.....

தக்கசிறு பிறைநுதலும் தரித்த
நறுந்திலகமுமே

அத்திலக வாசனைபோல்
அனைத்துலகும் இன்பமுற

எத்திசையும் புகழ்மணக்க இருந்த
பெருந் தமிழணங்கே!
உன்சீரிளமைத் திறம் வியந்து
செயல்மறந்து வாழ்த்துதுமே!

– மனோன்மணியம் சுந்தரம்பிள்ளை.
1855 – 1897

பிரெஞ்சியர் தம்மொழியைப் பெண் எனப் போற்றுகின்றனர்....

La langue française est une femme. Et cette femme est si belle, si fière, si modeste, si hardie, si touchante, si voluptueuse, si chaste, si noble, si familière, si folle, si sage, qu'on l'aime de toute son âme, et qu'on n'est jamais tentede lui être infidèle.

பிரெஞ்சு மொழி ஒரு பெண். இந்தப்பெண் மிக அழகானவள்; மிகக் கர்வமானவள்; மிக அடக்கமானவள்மி; கத்துணிவானவள்; மிக உணர்ச்சியானவள் மிக வசீகரமானவள்; மிகக்கற்புள்ளவள்; மிக உயர்வானவள்;மிகப்பழக்கமானவள்; மிகக் கிறுக்கத்தனமானவள்; மிக அறிவானவள்; ஆழ்ந்த ஆத்ம பூர்வமாக அவளை நேசிக்கும் நாம் அவளுக்கு விசுவாசமில்லாதிருக்க ஒருபோதும் முயன்றதில்லை.

–Anatole France. 1894 – 1924

தமிழ் இந்தியாவில் பிறந்த மொழி. பிரெஞ்சு பிரான்சில் பிறந்த மொழி. மூவாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக இடையறாமல் வாழ்ந்து பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் விளங்குவது தமிழ் மொழி, ஆனால் பிரெஞ்சு ரோமானிய சாம்ராஜ்யம் உடைந்ததன் விளைவாக கி.பி. 500 ஆண்டளவில் இலத்தீனிலிருந்து உருவாகி புதுமைக்கும் நாகரிகத்துக்கும் பேர்பெற்று விளங்குவது. இம்மொழியின் தோற்றத்தினையும் பிறப்பையும் பற்றி கூறக்கூடியதாய் இருக்கிறது. ஆனால் தமிழ் மொழியின். தோற்றத்தினையும் பிறப்பையும் பற்றி எவராலும் சரியாக அறியமுடியவில்லை! கூறமுடிய வில்லை! பிரெஞ்சின் முதல் எழுத்துச்சான்று கி.பி. நூற்றாண்டைச் சார்ந்தது. ஆனால் தமிழின் எழுத்துச்சான்று கி.மு. மூன்றாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்றும், தமிழின் இலக்கணம், இலக்கியம் ஆகியன பிரெஞ்சு இலக்கணம், இலக்கியத்திற்குக் காலத்தால் முற்பட்டன என்றும் இந்திய மொழிகள் எனும் நூலில் மொழியியலறிஞர் ச.அகத்தியலிங்கம் காலம் சுட்டியுள்ளார். (அகத்தியலிங்கம் – இந்தியமொழிகள் : பக்கம் 26).

தமிழும் பிரெஞ்சும் சொல்வளமிக்க அழகான மொழிகள். செம்மொழிகளாக உலவும் இவ்விருமொழிகளும் இரட்டைவழக்கு மொழிகளாக (Diglossic) உள்ளன. இவை தாம் பிறந்த நாட்டுக்கு வெளியேயும் பரம்பி வழங்கப்படுகின்ற சிறப்பை உடையன. வள்ளுவரின் மொழி இலக்கியத்திலும், மோலிஎரின் மொழி இலக்கியத்திலும் காகமும் நரியும் படிப் பினைக்கதை உள்ளது. தமிழ்க்காகத்தின் வாயில் பாட்டி சுட்ட வடை இருக்கும், ஆனால் பிரெஞ்சுக்காகத்தின் வாயில் பால்க்காரன் செய்த பாற்கட்டி இருக்கும். இந்த இரு அறிவியல் மொழிகளிலும் முதலாவது இருமொழி அகராதிகளை

உருவாக்கியவர்கள் பிறப்பால் இம் மொழிக்காரர்களாக அல்லாதவர்கள். தமிழில் முதலாவது இருமொழி அகராதியை உரு வாக்கியவர் Antao de Proenca என்கிற போர்த்துக்கேயர். பிரெஞ்சில் உருவாக்கியவர் Ambrogio Calepino என்கிற இத்தாலியர். இம்மொழிகள் பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்குவதை இயன்றளவு தவிர்த்துத் தம்மொழிச்சொற்களைப் புனைய வேண்டும் என்கிற கொள்கையில் போராடுகின்றன. இவ்விரு புதுமை மொழிக்காரர்களும் தம் மொழிகள் மீது பற்றுக்கொண்டவர்கள்.

கிரேக்கம், இலத்தீன், சமஸ்கிருதம் முதலான மொழிகளின் காலத்து மொழியாக நிலவிய தமிழ் அம்மொழிகளின் மகள்களின் (இலத்தீனின் மகள்கள் : பிரெஞ்சு, இஸ்பானியம், சமஸ்கிருதம், இந்தி, பெங்காலி...) காலத்திலும், மகள்களின் மகளான பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் உருவாக்கப்பட்டு, இக்காலத்தில் செயற்கை மொழியாக முன் னிலை வகிக்கும் எஸ்பெறென்ரோவின் காலத்திலும் நிலவுகிற மொழியாக வளமான வாழ்வுடையதாக தீர்க்காயுசுடன் இருக்கிறது. பதினேழாம். பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை ஐரோப்பாவில் கோலோச்சிய பிரெஞ்சு சர்வதேசச் சந்திப்புகளின் போது முக்கிய இடத்தை எப்போதும் வகிக்கிறது. உலகமொழிகளின் செல்வாக்கிலும் முக்கியத்துவத்திலும் ஆங்கிலத்துக்கு அடுத்த இடத்தில் இருப்பது பிரெஞ்சு மொழிதான்! பிரெஞ்சு மொழிக்கு முதல் இடம் கொடுத்தபின்னர்தான் மற்ற மொழிக்கு அடுத்த இடம் கொடுப்பது பிரெஞ்சியரின் தனிப்பண்பு! செம்மொழிக்குரிய பண்புகள் நிரம்பி, இலக்கியத்திற்காக அதிக நோபல் பரிசுகளைக் குவித்து, பெருமதிப்புடன் போற்றப்படுகிறது பிரெஞ்சு மொழி.

திராவிடம் என்பது திரவிடம் எனக் குறுகிப் பின்னர் திரமிடம், திரமிளம் எனமாறி திரமிளம் தமிளோ எனத் திரிந்து இறுதியாகத் தற்போதுள்ள தமிழ் என மாறியது எனத் திராவிட மொழிகளின் தந்தையான அறிஞர் கால்டுவெல் குறிப்பிட்டார். இதற்கு மறுதலையாகத் தமிழ் தான் திராவிடம் என ஆகியது என்ற கருத்தை ஸ்டென்கனோவ், பாஷம் என்ற ஆய்வறிஞர்களும் கருதினார்கள். தமிழம் – த்ரமிள(ம்) –த்ரமிட(ம்) –த்ரவிட(ம்) – த்ராவிட(ம்) என்னும் முறையில் தமிழம் என்னும் சொல்லே திராவிடம் எனத் திரிந்தது எனத் தேவநேயப்பாவாணர் தனது தேவநேயம் – 8 எனும் நூலில் அடித்துக்கூறினார். திராவிடம் என்ற வடமொழிச் சொல்லிலிருந்துதான் தமிழ் என்ற சொல் உருவாயிற்று எனக் கால்டுவெல் கொடுத்த விளக் கங்கள் ஊன்றி உணர்வாருக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை எனத் தமிழ்ப் பல்கலைக் கழக முன்னைத் துணைவேந்தர் ச.அகத்தியலிங்கம் (திராவிட மொழிகள் 1: பக்கம் 23) தெரிவிக்கிறார்.

வரலாற்றில், பிரான்சின் பூர்வீகப்பெயர் கோல் – La Gaule, பூர்வீகமொழி கோலுவா– le gaulois. ஜூலியஸ் சீசர் தலைமையில் ரோமானியர் கோல் மீது படையெடுத்து வெற்றி கொண்ட பின்னர், தமது மொழியான இலத்தீனை மக்களுக்குத் திணித்தனர். பின்னர் ஜெர்மனிய இனத்து பிராங்க் – franc பிரிவினர் இம்மண்ணில் பரவலாகக் குடியேறி நாட்டைத் தம்வசப்படுத்தினர். தமது மொழியான ஃப்ரான்சிக் le francique சொற்களை, பேசப்பட்டு வந்த கோலுவா – இலத்தீனுடன் கலப்புச் செய்தனர், இதன் விளைவாக ஃப்ரான்சியென் – le francien எனும் மொழி உருவானது. பிரெஞ்சிய மன்னர்களின் மொழியாக இருந்த இம்மொழி ஃப்ரான்சுவா – le françois என்றாகி இறுதியில் இன்றுள்ள : ப்பரான்ஸ்ஏ –le français ஆனது. இந்நாட்டில் பேசப்பட்டு வந்த மற்றைய

பிரதேச மொழிகள் மதிப்பிழந்தன. Franc> francique> francien > françois > français

இந்தியா, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், மொரிஷியஸ்,தென்னாபிரிக்கா,மியன்மார், இந்தோனேஷியா, வியட்நாம், சுரிநாம், கனடா, இங்கிலாந்து, பிரான்ஸ், மடகஸ்கார், அவுஸ்திரேலியா, ஜேர்மனி முதலாக 40க்கு மேற்பட்ட நாடுகளில் தமிழ் வழங்கப்படுகிறது.

பெல்ஜியம், லக்ஸம்பேர்க், சுவிஸ். மொனொக்கோ, அந்தோரா, கனடா – கியூபெக், ஐத்தி, மார்த்தினிக், குவாதலூப், குயானா செனெகால், மாலி, கினியா. இரு கொங்கோக்கள், புறுண்டி, கமறூன், சாட், டிஜ/புதி, மடகஸ்கார், அல்ஜீரியா, மொரொக்கோ, துனிசியா, லெபனான் ஆகிய 30 நாடுகளில் பிரெஞ்சு வழங்கப்படுகிறது. அமெரிக்கா, இங்கிலாந்து, இத்தாலி, ஒல்லாந்து, சிரியா, பிரேஜில் முதலான நாடுகளில் இரண்டாவது மொழியாகவும் கற்பிக்கப்படுகிறது. இந்தியாவில் புதுச்சேரி, காரைக்கால், மகே, ஏனம், ஸந்தாநகூர் ஆகிய இடங்களில் இன்னமும் வழக்கில் உள்ளது.

மனோன்மணியம் சுந்தரம்பிள்ளையின் மொழியின் வரலாற்றை 1. பழந்தமிழ், 2, இடைக்காலத் தமிழ். 3, தற்காலத்தமிழ் என மூவகையாகப் பிரித்து ஆராயலாம். கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பி.500 ஆண்டு வரையுமான பழந்தமிழ் முன்பழந்தமிழ் மத்திய பழந்தமிழ், பின்பழந்தமிழ் என மூவகையாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. கி.பி. 500 முதல் கி.பி.1600 ஆண்டு வரையுமான இடைக்காலத் தமிழ் முன் இடைக்காலத் தமிழ், மத்திய இடைக்காலத்தமிழ், பின் இடைக்காலத் தமிழ் என பாகுபடுத்தப்பட்டுள்ளது. தற்காலத் தமிழ் கி.பி.1600 ஆண்டு தொடக்கம் இன்று வரையிலான தமிழ் தற்காலத்தமிழ் முன் தற்காலத்தமிழ், பின்தற்காலத்தமிழ் எனவும் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

Anatole France இன் மொழியின் வரலாற்றை 1. பண்டைய பிரெஞ்சு, 2. இடைக்காலப் பிரெஞ்சு, 3.பண்பட்ட பிரெஞ்சு, 4. நவீன பிரெஞ்சு, 5. தற்காலப் பிரெஞ்சு என ஐவகையாகப் பிரித்து ஆராயலாம். 10 – 14 ஆம் நூற்றாண்டளவில் வழங்கப்பட்ட பிரெஞ்சு பண்டைய பிரெஞ்சு எனவும், 14 – 16 ஆம் நூற்றாண்டு காலப்பகுதியில் வழங்கப்பட்ட பிரெஞ்சு இடைக் காலப் பிரெஞ்சு எனவும், 1610க்கும் 1789 க்கும் இடைப்பட்ட காலத்தில் வழங்கப்பட்ட பிரெஞ்சு பண்பட்ட பிரெஞ்சு எனவும், 1789 க்கும் – 1914 க்கும் இடைப்பட்ட காலத்தில் வழங்கப்பட்ட பிரெஞ்சு நவீன பிரெஞ்சு எனவும், 20 ஆம் நூற்றாண்டு தொடக்கம் இன்று வரை வழங்கப்படும் பிரெஞ்சு தற்கால பிரெஞ்சு எனவும் வகுக்கப்பட்டிருக்கிறது.

மொழிக்கும் அகம், புறம் என அமைப்புகள் உண்டு. எழுத்து, இலக்கணம் என்பன அக அமைப்பாகவும், சொல், பொருள் என்பன புற அமைப்பாகவும் உள்ளன. இதை மேலும் விரிவாக ஒலியன், இலக்கணம், உருபொலியன் என்பன அக அமைப்பையும், ஒலி, சொல், பொருள் என்பன புற அமைப்பையும் சார்ந்தன என, சொல்லும் பொருளும் என்ற தனது நூலில் கூறுகிறார் தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல் புலத்தலைவர் முனைவர் எச். சித்திரபுத்திரன். எழுத்து என்பது மொழியின் அடையாளம். தமிழ், பிரெஞ்சு மொழிகளின் எழுத்துகள் அடிப்படையில் போனிசிய நெடுங்கணக்கிலிருந்துதான் வடிவம் பெற்றிருக்கின்றன. பின்னர் தமிழ் (தென்) பிராமி வடிவத்திலிருந்து வட்டெழுத்து எழுத்துகள் வந்தன என்றும்,




தென்பிராமிக்குத் தமிழி என்றொரு பெயரும் உண்டெனவும் அறிஞர்கள் நூல்களில் எழுதியிருக்கின்றனர். பிரெஞ்சு எழுத்து இலத்தீன் நெடுங்கணக்கிலிருந்து வந்தது. இங்கிலாந்தைப் பிரெஞ்சிய Normandie அரசர் William 1066 இல் வெற்றிகொண்டதன் விளைவாக பிரெஞ்சு மொழி ஆங்கில மொழிக்குள் திணிக்கப்பட்டது என்பது வரலாறு. William இன் மொழியின் நெடுங்கணக்கிலிருந்தே, Chaucer Geoffrey இன் மொழி நெடுங்கணக்கு அமைக்கப்பட்டது.

**ஒலியும் எழுத்தும்** – Les sons et les lettres தமிழில் 30 எழுத்துகளும். பிரெஞ்சில் 26 எழுத்துகளும் உண்டு. இருமொழிகளிலும் அடிப்படையில் அ(ஆ ) – a, இ(ஈ) – i. உ(ஊ) – u. எ(ஏ) – e, ஒ(ஓ) – o என 5 உயிர் எழுத்துகள். தமிழில் 12 உயிர்களும், 18 மெய்களும் உள்ளது போல் பிரெஞ்சில் 6 உயிர்களும் (a,e,i,o,u,y,), 20 மெய்களும் உண்டு. பிரெஞ்சிய எழுத்துகள் பால் காட்டும் தன்மையில் தமிழிலிலிருந்து வேறுபடுகின்றன. a,b,c,d,e,g,i.j,k ,o.p,q,t,u.v,w,y,z ஆகியன ஆண்பால் எழுத்துகளாகவும், f,h,l,m,n,,r,s,x ஆகியன பெண்பால் எழுத்துகளாகவும் உள்ளன. எழுத்துக்கு வரிவடிவம், ஒலிவடிவம் என இரு வடிவங்கள் உண்டு. பிரெஞ்சின் 26 எழுத்துகள் 36 ஒலிகளைப் பிறப்பிக்கின்றன.

6 உயிர்களும் 16 உயிரொலிகளையும் உண்டாக்குகின்றன. இதனால் இம்மொழியில் எழுத்துகளுக்கும் ஒலிகளுக்கும் இடையில் ஒழுங்கான தொடர்பு இருப்பதில்லை. இருமொழி முதலெழுத்துகளும் அ(ஆ) – a என்றே ஒலிக்கப்படுகின்றன. தமிழின் சிறப்பெழுத்தாக ழ இருப்பது போல் பிரெஞ்சில் சிறப்பெழுத்தாக ç-ஸ் இருக்கிறது. தமிழின் ழ வுடன் ஒப்பிடக்கூடிய எழுத்து பிரெஞ்சில் j உள்ளது. உயிர் நெடில்களுக்கு இருமொழிகளிலும் குறில்களுடன் குறியீட்டெழுத்துகள் சேர்க்கப்படுகின்றன – (அ – 2, ஆ. – â). ண்,ட், ச், ள் என்கிற ஒலிகள் பிரெஞ்சில் கிடையாது. பகரத்துக்கு 2 எழுத்துகளும், ககரத்துக்கு நான்கெழுத்துகளும் உண்டு.

**சொற்கள் – Les mots**

சொற்கள் மொழியையும் சமுதாயத்தையும் பண்பாட்டினையும் காத்துவழங்கும் கருவூலங்களாகச் செயற்படுகின்றன என்கிறார் அகராதியியலறிஞர் எச். சித்திரபுத்திரன். சொல் ஒன்று வடிவம், பொருள் என இருபக்கங்களை உடையது. செவ்வியல் மொழியான பிரெஞ்சில், ஒருவர் இன்னொருவருடன் உரையாடும் சமயம் ஆகக்குறைந்தது bonjour நன்னாளுக (வணக்கம்), s'il vous plait – தயவுசெய்து, merci –நன்றி, aurevoir மீண்டும் சந்திப்போம் போன்ற மரியாதைச் சொற்களைக் கையாள்வது பிரெஞ்சு மரபு.

மொழியில் அன்புறவுகளை வெளிப்படுத்த

அன்பு, பாசம், காதல், நட்பு, நேசம்,பக்தி எனப் பலசொற்கள் தமிழில் உள்ளன. ஆனால் இவ்வன்புறவுகளுக்கு ஈடாக amour எனும் ஒருசொல்லே பயன் படுத்தப்படுகிறது. தொப்பிக்குப் பிரெஞ்சில் chapeau, béret, bonmet, coiffe, casquette, casque, képi, toque, filet, mantille எனப் பலசொற்கள் உண்டு. வாசனைச் சரக்குச் சொற்கள் தமிழில் அதிகம். ஆனால் பாற்கட்டிகளுக்கும் வைன்களுக்கும் பிரெஞ்சில் அதிகம். நாகரிகம் ஆடை மற்றும் பாலியல் தொடர்பான சொற்கள் நாகரிக: மொழியில் தாராளமாக உள்ளன.

மனிதர்களின் அறிவு வளர மொழிகளில் சொற்களும் உருவாக வேண்டிய தேவை ஏற்படுகிறது. தமிழிலும் பிரெஞ்சிலும் சொற்கள், ஆக்கம், திரிபாக்கம், ஒட்டுநிலையாக்கம், கலப்பாக்கம். ஒலிக்குறியீட்டுச் சொல்லாக்கம், சொற்குறுக்கம், குறுக்கச்சொல், பகுதியாக்கம், புத்தாக்கம், கடன்வாங்கல் என்கிற முறைகளில் ஒத்திருக்கின்றன. உதாரணமாக, ஒலிக் குறியீட்டாக்கத்தில் தமிழ்ச்சேவல் கொக்கரக்கோ எனவும், பிரெஞ்சுச்சேவல் கொக்கொரிக் எனவும் கூவுகின்றன.

மொழிகளில் சொற்கள் கடன்வாங்கப்படுதலை ஆங்கில மொழிதான் உலகில் வரவேற்கிறமொழியாக முன்னிற்கிறது. ஆனால் தமிழும் பிரெஞ்சும் பிறமொழிச் சொற்கள் தத்தம் மொழிகளில் புகுவதை. ஊடுருவதை எதிர்த்தே வருகின்றன. ஆயினும் இரவல் வாங்கப்படுவது தவிர்க்கப்பட முடியாது என Otto Jesperson தெரிவித்தார். இம்மொழிகள் பிறமொழிச்சொற்களைக்கடன்வாங்குவதை இயன்றளவு தவிர்த்துத் தம்மொழிச் சொற் களைப் புனைய வேண்டும் என்கிற கொள்கையில் போராடுகின்றன.

தமிழில்34 பிறமொழிச்சொற்களும் பிரெஞ்சில் 25 மொழிச்சொற்களும் இரவல் பெறப்பட்டிருக்கின்றன. biscuit – பிஸ்கட், toilette – டாய்லெட், bureau – பீரோ, eau –de cologne – ஓடிக்கொலோன், ronde – ரோந்த், bataillon – பட்டாளம், parachute –பாரசூட், bouteille – போத்தல், cuisine – குசினி bouquet – புக்ஏ, parlement – பாராளுமன்றம் போன்றவை தமிழில் உள்ள பிரெஞ்சுச் சொற்கள். அரிசி – riz, curi – கறி, இஞ்சிவேர்– gingembre, பறைய(ன்) – pariah – தேக்கு – teak. – சந்தணம் – santal, மாங்காய் – mangue, வெட்டிவேர் – vêtiver, கட்டுமரம் – catamaran போன்றவை தமிழ்ச் சொற்கள். சமஸ்கிருத சர்க்கர என்பது தமிழில் சர்க்கரை எனவும் பிரெஞ்சில் sucre –ஸூய்க்ர் எனவும், சீனத்து சா என்பது தமிழில் தே(யிலை) எனவும் பிரெஞ்சில் thê – த்ஏ எனவும் கடன் வாங்கப்பட்டிருக்கின்றன.

**சொற்பிறப்பு :**

**அம்மா – maman**

மம்மம் எனும் சொல் தாயின் மார்பகத்தைக் குறிக்கும். மம்மம் என்பது அம்மம் என்றாகி அம்மம் என்பது அம்மா என்றானது. பிரெஞ்சிலும் மார்பு. மார்பகம் எனும் பொருள் தரும் mamma என்ற இலத்தீன் சொல்லிலிருந்து அம்மாவைக் குறிக்கும் maman என்பது பிறந்தது. Mammê என்ற கிரேக்கச் சொல்லின் வழி mamma என்பது வந்தது.

மம்மம்.... அம்மம்.... அம்மா. mammê.... Mamma.... Maman

**Toilettes டாய்லெட்**

Toilettes எனும் பிரெஞ்சுச் சொல்லிலிருந்து வந்தது. மோலிஎரின் மொழியில் Toile என்றால் துண்டுத்துணி,

**தமிழிலும் பிரெஞ்சிலும்**
**ஒப்புநோக்கத்தக்கச் சொற்கள் :**

| தமிழ் | பிரெஞ்சு | தமிழ் | பிரெஞ்சு |
|---|---|---|---|
| அம்மா | maman | ஒன்று | un |
| அப்பா | papa | சர்ப்பம் | serpent |
| பாப்பா | bébé | திரி (மூன்று) | trois |
| சென்னி | zénith | சின்னம் | signe |
| அமர் | amour | நோட்டம் | noter |

Toilette என்றால் சிறிய துண்டுத்துணி எனவும் பொருள். சுத்தப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்படும் சிறிய துணித்துண்டையே ஆரம்பத்தில் இது குறித்தது. பின்னர், இருபதாம் நூற்றாண்டில் கழுவும் இடம் என்ற அர்த்தத்தில் வழங்கப்பட்டு, இக் காலத்தில் கழிப்பறை, கழுவும் சிறிய அறை என்கிற கருத்துகளில் வழக்கில் உள்ளது. Toile..... toilettes

மொழிகளில் சொற்பிறப்பு நகையாட்டு சொற்பிறப்பு முறையிலும் உருவாக்கப்படுதல் உண்டு. தமிழில் தோசை என்பதையும், பிரெஞ்சில் biscuit – பிஸ்கட் என்பதையும் எடுத்துக் காட்டுக்குக் காட்டலாம்.

**தோசை: தோ +சொய்ங்**

இரண்டு ஒலி

தோசை மாவை தோசைக் கல்லில் ஊற்றும் போது, 'சொய்ங்" என்ற ஒலி எழும். வெந்த தோசையின் பக்கத்தை அக்கல்லில் திருப்பிப் போடும் போது இன்னொரு இரண்டாவது "சொய்ங்" எழுவதனால் தோசை எனும் சொல் உருவானது.

**biscuit : bis + cuit**

இரண்டு வெந்தது (சமைக்கப்பட்டது)

பிஸ்கட் என நாம் அறிந்த சொல் ஆங்கிலச்சொல் என நினைக்கிறோம். ஆனால் இச்சொல் பிரெஞ்சுச்சொல் bis, cuit என்ற இரு சொற்கள் சேர்ந்துதான் biscuit உருவானது. bis என்றால் இரண்டு என்றும், cuit என்றால் வெந்தது, சமைக்கப்பட்டது என்றும் பொருள். cuit என்பது cuire என்ற வினையின் இறந்தகால வினைவடிவம்.

தொடரும்...

# Tracing the Trajectory of Linguistic changes in Tamil: Mining the corpus of Tamil Texts[1]

Vasu Renganathan
University of Pennsylvania

Abstract

This paper discuses in detail the linguistic developments that took place in Tamil during the medieival period, especially due to enormous production of religious texts. Formation of many new suffixes and depletion of some of the old Tamil forms took place during the medieval period. It is stated that some of the old Tamil forms that seemed to have co-existed along with modern Tamil forms during the medieival period were mainly due to the grammatical processes such as reanalysis, metaphorization, phonological reduction, elimination of redundancy etc., that underwent rigorously during that time. The development of aspectual forms such as kontu, kol, konṭiru etc., and the modal forms like lām etc., took place during the medieval period primarily because of these grammatical processes. For instance, forms like peralākumē 'it is possible to attain', when employed in medieval Tamil poems in multible number of reanalyzed structures, like ākumē, peral āmē, peralāmē, pera lāmē etc., the new form -lām came into existence. It is argued in this paper how tracing the trajectories of changes, understanding the development of new forms and depletion of old forms require a systematic analysis of the corpus of Tamil data from Sangam to modern Tamil from a historical perspective.

## Introduction

Tamil words underwent a major change both connotatively and structurally during the medieval period when heavy borrowings from Aryan languages took place. Simple word forms of the Sangam period transformed into more complex forms with multiple number of suffixes. Many grammatical forms such as aspectual markers, tense markers, modal suffixes etc., were introduced in the language during the post medieval period. As a result, the agglutinative nature of Tamil words with conceptually complex connotations came into existence. With the availability of Tamil literatures from Sangam to modern period in electronic form, it is now possible for one to study and analyze the texts more systematically than ever before, and tracing the trajectory of changes that took place historically from Sangam to modern period has become an easier task than before. I attempt to use the available Tamil electronic texts and employ a set of techniques to study

the nature of linguistic changes that took place historically from Old Tamil to Modern Tamil.[2]

Cankam Tamil is considered to be a standardized literary language, which exhibits less number of loan words and relatively minimum morphological and syntactic complexities compared to other genres. For the reasons of retaining many of the archaic and indigenous features, this variety of language is also termed centamir. In some of the early poems of Cankam collections such as kuṛuntokai, ainkuṛunūṛu, puranāṉūṛu, patirrup pattu and narrinai – and in the grammar of Tolkāppiyam one finds more number of

pure Tamil words with unique morphological structures than any other later works. However, in the post Cankam works of the Cankam classics, as in the epics such as Manimēkalai, Cilappatikāraam etc., one notices many vocabularies borrowed from other traditions like Buddism and Jainism. The other significant genre of Tamil that one can distinguish from Cankam Tamil is the medieval Tamil, which is usually the language of inscriptions and religious literatures. Inscriptions are available from Pallava period to Chola period and they contain the variety of language nearer to the spoken language of that time Zvelebil (1970, p. 16).

Linguistic structure of Cankam Tamil in general and the verbs in particular are found to be much simpler than the structures as one may find in medieval Tamil, otherwise called language of bhakti. Development of aspectual forms, modals, causatives and other similar grammatical categories at a later stage contributes significantly to the complex nature of medieval and modern Tamil. Presumably, these categories were developed historically by a number of linguistic processes such as grammaticalization, reanalysis of word forms, metaphorization and so on. One of the significant characteristics of medieval Tamil, unlike the other two genres, is that it retains the features from both old Tamil as well as modern Tamil. What it means is that since it was the period when many of the new linguistic features were developed, perhaps due to the influence of Sanskrit and other traditions and due to enormous amount of textual production, more number of morphological and lexical items were introduced in the language during this time.

Use of Sanskrit loan words, emergence of a Manipravāla style of language, and the development of agglutinative nature of word forms are some of the significant characteristics that mark the nature of the language into three periods namely old, medieval and modern. The language of medieval Tamil developed as a separate genre in comparison to Cankam and Modern Tamil in many respects. This is mainly because of the influence of religious content as well as the Sanskrit language. There are linguistic characteristics which are unique to medieval texts, both at morphological and lexical levels. Many of the lexical and morphological forms that are less-commonly occurring in Cankam texts seem to be occurring in larger proportions in medieval Tamil (Shanmugam 1995). Also, there are many instances where certain lexical items

underwent meaning change in medieval Tamil in accordance with their use in the religious contexts. Some of the prominent features of the medieval Tamil that deserve mention here are as follows. The present tense suffix 'kinr', for example, is developed only during medieval period, particularly in bhakti texts; the palatalized forms such as - cc-, and -ñj- that occur within a verb that ends in the front vowel 'i' are more common in medieval Tamil than in Cankam Tamil. At lexical level, one finds many words being understood differently than they were during the Cankam time. There are instances where words referring to 'kings', 'palaces' etc., have taken on religious connotations. Eg. the word kōyil means 'palace' or 'King's place' in Cankam Tamil, where as it means 'temple' or 'god's dwelling place' in medieval Tamil; the verb vaṇanku means 'bend' or 'yield' in Cankam Tamil, but it means 'worship' or 'pray' in medieval Tamil and so on (Shanmugam 1995, p. 55).

## The data

The data for analysis in this work is chosen form Cankam Tamil texts of eight anthologies, ten songs, eighteen didactic works, five epics and the grammar of Tolkāppiyam. The medieval Tamil texts consulted include mainly the Saiva Tirumurai of the sixty three Nāyanmārs, the Nālāyirat tivyap prabandam text of twelve Ālvārs, and a number of other religious and philosophical works composed until the thirteenth century[3]. The five major contributors to the Saiva canon of Tirumurai include Tiruñāna campantar, Tirunāvukkaracar, Cuntara mūrti, Māṇikkavācakar and Tirumūlar. Among these poets, Appar is considered to be the earliest belonging to the period during the 7th

century C. E.; Tiruñansampantar and Cuntaramurti are believed to be contemporaries belonging to the 8th century C. E. Then comes Tirumular, whose work falls during the 9th century and finally Māṇikkavācakar who belongs to 10th or 11th century C. E. [4]

### Influence of Sanskrit in bhakti poetries of Nayanmārs:

Although the Sanskrit words that Nāyanmārs use are nativized, one finds the style of the language in their works largely different from the language of Cankam, mainly because of their use of Sanskrit words in their poems. In fact, there were also cases where more number of linguistic changes taking place during the medieval period, as a result of altering the morphological structure of the language. Sanskrit influenced the Tamil language in two stages: first during the Cankam period and the other during the bhakti period (Sundaram 1965, p.173).[5] Varadarajan (1980, p. 173) states that the amount of Tamil words traceable to Sanskrit was just 1% in Cankam; and it grew up to 3 to 5% in epics (around 700 A.D.). Then, the number rose further during the bhakti and later period. This led to the use of new style of language namely Manippravāla from the 13th century onwards. The Sanskrit words traceable in Cankam period includes mostly words related to kings, palace etc., besides some of the devotional terms. Thus, one finds words such as cavai from Skt. sabha: 'assembly'; arccanay from Skt. arcane: 'worship'; īccuran from Skt. īśvara 'Lord Siva' and so on. Tolkāppiyar recognizes the existence of Sanskrit words during his time, and gives the name vatacol for such foreign words. Since the term vatacol means 'Northern words', a generic word, one can assume that he also refers to the other languages such as Prakrit, Pali, besides Sanskrit. Further, it is only during the bhakti period a general fashion or general rule comes to be established for the method of Tamilizing foreign words. Even though one finds these rules documented by Pavaṇanti, author of the Tamil grammar called nannūl in thirteenth century, the Tirumurai texts show that a regular system of nativization of Sanskrit word had already been established. e.g. punniyam < punya: 'Merit'; cimmam < simham 'lion'; akkam < akṣam 'eye' and so on.

### Borrowed lexical items from Sanskrit

| Original Tamil word | Sanskrit word | Nativized word | Meaning |
|---|---|---|---|
| cinam | [illegible] | kōpam | anger |
| makiḻcci | santōṣa- | cantōcam | happiness |
| [illegible] | uttama- | uttamar | noble person |
| [illegible] | adhipati- | atipati | leader |
| eṇ | [illegible] | kaṇi | calculate |

Many Tamil words are replaced by borrowed words from Sanskrit, and the native words became obsolete during the medieval time itself. Many Sanskrit words became part of the linguistic stock of Tamil during the medieval period, and so the equivalent Tamil words that are used widely in Cankam texts are either used in a very minimum context, or not used at all both in the medieval texts as well as in modern Tamil language. Consider below some of the commonly used Tamil words that are replaced by the corresponding Sanskrit words[6].

The nativized Sanskrit words in Tamil made the parallel Tamil words obsolete during the medieval period itself, so their use is blocked. This may be considered as one of the important reasons for why the movement for purism was developed at a later point[7].

### Present tense marker -kinr

Cankam Tamil exhibits only past and non-past distinction as far as tense is concerned, and no present suffix is attested. Only the suffixes -vu and -pu (non-past) along with a set of past tense markers including -nt, -tt etc., are used widely in Cankam Tamil. The present tense suffix -kinr occurs in the post Cankam works of Cilappatikaram and Paripadal. But later during the bhakti period it is widely used both in Saiva as well as in Vaiṣṇava hymns. This suffix was later developed into a more refined form with two other allomorphs namely -kir and -kkir as in modern Tamil[8]. Thus, it can be stated that the development of present tense marker shows a continuum of linguistic changes from post Cankam to bhakti period. It is unknown,

however, why and how only the form -kinr was attested for the first time, and not the other regular suffix - kir. Sundaran (1965, p. 140) suggests that the suffix -kint that occurs in Cankam Tamil is the source for the suffix -kinr in bhakti period. Interestingly, one notices the use of kinr with the conditional suffix -aal in Aingurunuru, Ahanaanuru and Kalittohai as shown below.

**ainkurunūru:**

75: alar toṭańkinṟāl ūrē malara ‘if the flower bloomes, the whole town is happy'

411: kār toṭankinrāl kāmar puravē 'if the winter starts, the lovers separate'

412: kār toḍankinral poludē 'if the clouds start, the day dawns...'

**akanānūru**:

256: kavvai ākinrāl peritē ini ahdu 'if it is for the doing, it becomes a big issue'

**kalittokai**

41: nanru ākinrāl tōzi nam vallaiyul 'if it is good, friend is within our reach..'

**The particle kil:** The particle -kil to be able' is a new innovation in bhakti literature, and was not found either in old Tamil or in modern Tamil. This means that this verb is only found in medieval texts. Even though its origin is obscure, it is a possible candidate for one to assume that it is a source for the later development of 'modal' forms. However, no study is made so far linking this suffix and the equivalent modal form in modern Tamil. Zvelebil (1971, p. 444), for example, hypothesizes that this suffix is the starting point for the development of present tense marker in Tamil. But, it is to be noted that both the verb -kil and the suffix -kinr are used distinctively and extensively in bhakti Tamil, and hence considering them as related to one another does not seem to be a plausible hypothesis. Note below the use of the suffix kil and -kinr in Tiruvācakam in distinct senses:

**kirpan** unṇavē 'I am able only to eat'

**panai pitittuk kiṭakkinrēnai** 'I am lying here grabbing the stylus' (31) Tiruvācakam (14)[9]

**The conditional marker -āl**

The conditional suffix -in is used widely in Cankam Tamil, but in the language of bhakti both -al and -in are used. As stated elsewhere, only in some instances, the suffix -al is used with the present suffix -kinr to denote conditional in Cankam. The suffix -al is used both as an instrumental suffix as well as a conditional suffix in both medieval and modern Tamil. The difference between the use of -in and -al as a conditional suffix is that the former occurs with any tense suffix, but the later occurs only with past tense marker.

pērkonta pārppān pirāntannai arccittāl name-
acquired Brahmin god-acc. workship 'If a known Brahmin worships the God...'
(Tirum: 519).

**Negative construction and the use of the suffix -ā**

The system of negative has underwent many changes in all of the three stages of Tamil, and in each stage one finds a complex system of features for 'negation'. The Cankam Tamil has the suffix -ā as a negative marker and it is added after the infinitive of the verb as in ceya + a> ceyā.[10] The form ceya is homonymous to the negative participle marker' ceya 'one who did not do' and ceyan 'he who did not do'. Interestingly, Cankam Tamil shows the suffix -al being used for negative participle as in var-al-an 'one who did not come'. But, only the suffix -ā is carried over to bhakti period, but not the suffix -al. When the suffix -a occurs with the word utai, for example, it gives the meaning of 'the one who is possessed with s.t.'. E.g. aṭakkamuṭaiyan 'one who is possessed with obedience' (Tirum 554). Tirumurai text also contains the suffix -āta besides the remnants from Cankam i.e., -ā. E.g. kallāta mūṭarai 'the unlearned fool' (Tirum 337). The relative participle form is marked in bhakti period with two different suffixes namely -ata and -a, where as in Cankam period only the suffix -a is used. It is worth mentioning the fact that in modern Tamil only the suffix

-āta is used as a relative participle marker. Thus, medieval time is the period when both the newly developed grammatical forms, as well as the remnants from Cankam Tamil are retained.

**Use of the aspectual auxiliary kontu:**

It is generally believed that part of the aspectual system, the way it is understood in modern Tamil, was developed in medieval Tamil and most of the complex structures were developed later during the post-medieval period. One example for this is that the

reflexive suffix -kol is used only with its lexical meaning of 'have/acquire' in Cankam Tamil, but in medieval Tamil it is grammaticalized, and the meaning of 'self-benefaction' is evolved. The other semantic nuances of this suffix, such as 'future utility', 'reflexivity' etc., are not attested in any of the medieval texts. This implies that the grammaticalized verb -kol with its meaning of 'self-benefaction' did not yet move on to the next stage of elaboration during the medieval period, and only must have taken place in the modern period.

The suffix kontu occurs only after nouns in most of the Cankam Tamil works, giving the meaning 'have s.t.', but only in medieval Tamil it is used widely with a verbal participle form. Presumably, this led to the development of the aspectual auxiliary verb. Following examples substantiate the point that the new structure of [participle + kontu], was introduced in bhakti period.

**tētik kantu kontēn** seek-and find-and acquired I saught and realized (Him within me)' (Appar Tēvāram: 4.9.12)[11]

nunporu **lāyntu kontu** deep knowledge research have 'Having researched the deep knowledge' (Appar Tēvāram 4.40.2).

Despite very less number of occurrences, especially in Akanānūru, no use of this form in large number, as in medieval texts, is found to be occurring in Cankam texts.

vari punai villan orukaṇai terintukontu

line beauty opponent an arrow having known

'having understood the power of the arrow from the opponent' (Akam: 48)

There is a strong reason to believe that Appar was the one who used the structure of the form [verbal participle + kontu] with aspectual meaning and it spread further among the other poet saints at a later point.[12] Since, the structure: [verbal participle + kontu], is not used very much in Cankam Tamil, and it is attested largely in medieval Tamil, one can suppose that only during the medieval period the reanalysis of the lexical verb kol must have taken place in a wider perspective. Since Appar is considered as the earliest among all the other poet saints, and we find this structure being used only in his work more than any other saint poets, we may assume that his work contributed to the widespread use of this auxiliary verb at a later stage.

When the verb kontu is used with another verbal participle form, it loses its lexical meaning and gives a grammatical meaning of 'acquiring s.t. for one's own benefit'. This reanalyzed structure led to the use of koṇṭu as a grammatical category. The lexical verb kol also occurs in the language simultaneously. Even though, the combination [noun + kontu] is used along with its lexical usage throughout the medieval period, the combination of [participle + kol] with other tense markers, however, are not attested in bhakti texts. So, it may be assumed that during the bhakti period grammaticalization of this auxiliary verb in its past participle form (kontu) was targeted, and it did not spread to other tense forms. [13]

**Use of the aspectual auxiliary vit**u:

Unlike, the use of kol, the completive auxiliary -itu seems to have been a well developed system both in medieval Tamil as well as in Cankam Tamil. Consider below the example sentences taken from Tirumantiram, which shows the use of the suffix -itu as a completive auxiliary verb - meaning the action stated by the verb happens for sure.

ovvāta manrul **ātitum**

inappropriate assembly dance '

One who would be dancing (for sure) in an inappropriate assembly' (Tirum: 130).

**vilankitu** perumaram pola

cherish big tree like

'Like a tree that cherishes well' (Puram: 278).

Note that in modern Tamil only the verb -vitu is used as an aspectual auxiliary, but in medieval and old Tamil the verb -itu is used in its place. It seems clear that the auxiliary verb -vitu which is conceptually related to -itu, is grammaticalized in modern Tamil in replacing -itu.[14]

Footnotes

1 I record my sincere appreciation to Prof. V. I. Subramaniam, whose academic excellence in Dravidian and Tamil linguistics inspired me in many ways, directly and indirectly, to shape my academic career. Particularly, I was fortunate to be able to learn from many of his students and colleagues including Prof. S. Agesthalingom, Prof. S.V.Shanmugam, Prof. Kumarasamy Raja, Prof. E. Annamalai, Prof. K. Rangan and others, who nurtured me with my academic endeavors at a very personal level and made me acquire a clear insight of the Tamil language in all of its three genres namely Sangam, medieval and modern.

2 The corpus of Tamil text from Sangam to Modern Tamil along with necessary search techniques is made available at the URL: http://www.thetamillanguage.com/sangam. Earlier version of this paper was presented at the fourth annual Tamil conference, University of California, Berkeley, 2008.

3 The data for this work is sited from online archive of Tamil literature made available at the URL: http://www.thetamillanguage.com/sangam. See Zvelebil (1964), Pillai (1979), Sundaram (1965) etc., for a detailed study of Tamil literatures of old and medieval Tamil.

4 See Varadarajan (1972) for a detailed study of Tamil literatures and their chronology.

5 Emeneau (1954) studies closely the contact of Aryans with Dravidians during the Harappan times. He concludes that there existed a linguistic substratum after the contact of Aryans with Dravidians and it led to borrowing of some Dravidian words into Sanskrit. Some of the Dravidian words that are believed to have borrowed by Sanskrit during that time include kalan 'battle field' mayil 'peacock', ēlam 'cardomom' etc. It should be understood that as there were no written records for Tamil produced during that time, it becomes not possible to predict what Sanskrit words would have been in turn by Tamil at that point. Vaidyanathan (1971) documents the Sanskrit words that were borrowed during Cankam time as well as during medieval period.

7 See Annamalai (1979, p. 35-59) for a detailed account of the linguistic purism in Tamil.

8 E.g. nī māḷā vārkinrayē 'you live without dying' (Manikkavācakar 23)

9 l' becoming 'r' is a common phonological rule in Tamil. This is the reason why the form 'kirpan' is attested here, rather than 'kilpan'.

10 Notice that the root is not doubled, as it should be in modern Tamil where the final consonant of the single syllable words double when a suffix is added.

11 Saiva saint Appar is the earliest Śaiva poet whose work is included in fourth book of the Saiva canon Tirumurai.

12 A search in the archive of medieval texts for the use of kontu as an aspectual auxiliary shows that only the structure noun + koṇṭu is used quite extensively in the Tirumurai texts. But, the typical structure of 'verbal 'participle + kontu' seems to have been used in a much lower percentage.

13 See Annamalai (1985) and Schiffman (2005) for a detailed analysis of the use of the aspectual auxiliary kol and their various usages.

14 The lexical verb itu means 'place, deposit or discharge' (DED 442), 'hit against' (DED 443).

*to be continued...*

# தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள்




முனைவர் மூ. கவிதா
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
ஸ்ரீஇராமசாமி நாயுடு ஞாபகார்த்த
கல்லூரி (தன்னாட்சி) , சாத்தூர்



ப.இரதிதேவி
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஸ்ரீஇராமசாமி நாயுடு ஞாபகார்த்த
கல்லூரி (தன்னாட்சி), சாத்தூர்



இருபதாம் நூற்றாண்டில் தமிழை மீட்கும் பணியையும், புதுப்பிக்கும் பணியையும் ஒருங்கே செய்த பெருமைக்குரிய தமிழறிஞர்களுள் பாவாணரும் ஒருவர். தமிழ்ப்பயிர் செழிக்க, தமிழ்மொழியில் புகுந்த களைகள் என்ற அயல்மொழிச் சொற்களை நீக்கித் தமிழ்நிலத்தைச் செம்மைப்படுத்திய சான்றோர்களில் சிறந்தவர் தனித்தமிழ் வேழம் பாவாணர் எனலாம். அறிவியல் நாகரிகத்தின் விளைவாக மொழியில் ஏற்பட்ட வளர்ச்சியே கலைச்சொல்லாகும். கலைச்சொற்களை உருவாக்குவதில் ஒப்பொலி முறை, மொழிபெயர்ப்பு முறை, வேர்முறை, செம்மொழிபெயர்ப்பு, ஒரு பொருட்பன்மொழியை ஓரினப்பொருள்களைக் குறிக்கப் பயன்படுத்துதல், கரணியம் பற்றி பெயரிடல், நுட்ப வேறுபாட்டைக் குறிக்கச் சொல்லைத் திரித்துக் கொள்ளுதல் எனப் பல வழிமுறைகளைப் பற்றியும் பாவாணர் இவ்வாய்வில் கூறியுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.


## முன்னுரை:

"தமிழுக்கு நாளும் செய்வோம் நல்ல தொண்டு" என்ற கோட்பாட்டை வாழ்க்கை நெறியாகக் கொண்டவர் தேவநேயப் பாவாணர். தனித்தமிழ் பரவ, செழிக்க, செயல்திட்டம் வகுத்தவர் பாவாணர். தமிழே உலகில் தோன்றிய முதல்மொழி என்பதை மொழிக்கொள்கைகள் ஆய்வின் அடிப்படையில் அடையாளம் காட்டுகிறார் பாவாணர். மொழிநூல் ஆய்வில் பாவாணர் சொல்லாய்வு ஒரு குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தது எனலாம். இத்தகைய சிறப்புமிக்க பாவாணரின் சொல்லாய்வுகள் பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## சொல் ஆய்வு

தேவநேயப் பாவாணர் தனக்கென்று சொல் ஆய்வில் புதிய நெறிமுறைகளை வகுத்துக்கொண்டு ஆய்வை மேற்கொண்ட பெருமைக்குரியவர். எனவே புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் தேவநேயப் பாவாணரை,

"ஆதிமொழி என் அருமைத்தமிழ் ஒன்றே

ஓதி உலகுக் குணர்ந்திடவே தீதின்றி

ஆவன செய் பேரறிஞர்"

என்று போற்றுகிறார். சொல்லாராய்ச்சியில் இணையற்ற தொண்டு செய்த பேரறிஞராகப் பாவாணர் செயலாற்றியதால் அறிஞர் பெருமக்களால் 'கலை ஞாயிறு' என்று பெயர் பெற்றார்.

## தனித்தமிழ் இயக்கம்

தேவநேயப் பாவாணர் தமிழ்மொழிக்கு இணையற்ற தொண்டு செய்தவர். அவர் தமிழை மீட்கவும், தனித்தமிழாய் வளர்க்கவும் இருபெருங்கருவிகளைப் பயன்படுத்தினார். ஒன்று வேர்ச்சொல் ஆய்வு மற்றொன்று சொல்லாக்கம். இவ்விரு கருவிகளும் பாவாணரிடம் செம்மையாக அமைந்திருந்தன. எந்தச் சொல்லையும் அதன் ஆணிவேர், பக்கவேர், சல்லிவேர் என அடிவரை ஆய்ந்து மூலங்காணும் மூளையுரம் மிக்கவராய் அவர் விளங்கினார்.

'மொழி ஞாயிறு' தேவநேயப் பாவாணர் ஓர் மொழி மீட்பாளர். தமிழ் மொழியின் குருதியோட்டத்திலும் நெஞ்சாங்குலையிலும் வடமொழித் தாக்கம் இருந்ததை உணர்ந்த பாவாணர் தமிழைக் கவ்வியிருந்த இருளைப்

போக்கப் பாடுபட்டார். பிறமொழிச் சொற்களுக்கான தனித்தமிழ்ச் சொற்களை ஆக்கித் தந்த படைப்பாளராக அவர் திகழ்ந்தார். எந்த நிலையிலும் பிறமொழி ஒலியோ, எழுத்தோ, சொல்லோ தமிழில் கலக்கக்கூடாது எனும் கொள்கையுரம் மிக்கவராய் அவர் வாழ்ந்தார். தந்தை பெரியார் எனும் பெயரைச் சொன்னதும் அவரின் பகுத்தறிவுக் கொள்கை நினைவுக்கு வருவதைப் போல் பாவாணர் என்றதும் அவரின் தனித்தமிழ்க் கொள்கையும் வேர்ச்சொல் ஆய்வும் நினைவுக்கு வரும் என்பதில் ஐயமில்லை.

### பாவாணரின் சொல்லாக்கம்

தமிழில் கலைச்சொற்களை உருவாக்கம் போது கலவை மொழியாய் ஆக்காமல் தனித்தமிழில் அவற்றை உருவாக்க வேண்டும். தூய்மையே தமிழின் உயிர்நாடி. 'சென்சஸ்' எனும் சொல்லுக்குக் "குடிமதிப்பு" என்று அழகாகச் சொல்லாக்கம் செய்தார் பாவாணர்.

உலக முதன்மொழி தமிழ்; இந்திய மொழிகளுக்கு மூலமும் வேரும் தமிழ்; திராவிட மொழிகளுக்குத் தாய்மொழி தமிழ்; உலகின் முதல் மாந்தன் தமிழன்; தமிழ் தோன்றிய இடம் குமரிக்கண்டம்; மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரீகம் பழந்தமிழ் நாகரீகமே! என்பது பாவாணரது ஆய்வு முடிவு. கிரேக்கம், இலத்தீன், சமற்கிருதம் உள்ளிட்டவைகளுக்குச் சொற்கள் பலவற்றை அளித்தது தமிழ் என்று ஆய்வுகள் மூலம் பாவாணர் கூறினார். தனித்தமிழில் பல்வேறு வகையான கலைச்சொற்களை உருவாக்கியதிலும் பாவாணருக்கு மிக முக்கிய பங்குண்டு எனலாம்.

### வேர்ச்சொல்–விளக்கம்

மக்களைப் போன்றே சொற்களும் குடும்பம் குடும்பமாகவும் குலம் குலமாகவும், இனம் இனமாகவும் கொடிவழி முறையில் இயங்குகின்றன.(1)

### வேர் என்பது உவமையாகுபெயர்.

வேர்ச்சொல் மூலமும் திரிவும் என்னும் முறையில் வேர், அடி, முதனிலை என்னும் வகையீடும், ஆணிவேர், பக்க வேர், கிளைவேர் என்னும் வகையீடும் ஒன்றே. மலேசியா, சிங்கப்பூர், தென்னாப்பிரிக்கா முதலிய வெளிநாடுகளுக்குத் தனித்தனியாகவும் குடும்பம் குடும்பமாகவும் தமிழர் சென்று அங்கு நிலையாக வாழினும் அவர்களின் முன்னோராலும் தமிழ்நாட்டு உறவினராலும் அவர்கள் தமிழர் என்றே அறியப்படுதல் போல் தமிழ்ச்சொற்களும் அண்மையிலும் சேய்மையிலும் உள்ள அயன்மொழிகளிற் சென்று வழங்கினும் அவற்றின் மூலத்தினாலும் தொடர்புடைய தமிழ்ச் சொற்களாலும் அவை தமிழ் என்றே அறியப்படும். வேர்ச்சொற்கள் சிறுவேரும் பெருவேரும் என இருவகைப்படும். மொழி அறிஞர்கள் ஆற அமர ஆய்ந்து வேர்ச்சொல் விதிகளை வகுப்பதற்குப் பாவாணர் நூல்கள் சான்றாதாரங்களாக உள்ளன எனலாம்.

### திராவிட மொழி வேர்ச்சொற்கள்

பாவாணர் தமது ஆய்வு நூல்களில் தொல் திராவிட வேர்ச்சொற்களை இனம் காட்டியுள்ளார்.

இந்தோ ஐரோப்பா மொழிகளில் வேர்கள் என உன்னிக்கப்படுபவை பொருள் தொடர்பற்ற வெறும் குறியீடுகள் தாம். திராவிட மொழி வேர்களோவெனில் ஐயத்திற்கிடமின்றிப் பொருளையும் காரணத்தையும் காட்டுப்பவையாக உயிரோட்டமுள்ள மூளைக்கரு போலத் தோன்றும். எந்தக் கருத்தோட்டத்தில் பல்வேறு சொற்கள் உருவாயின என்பதைத் தெள்ளென அவை காட்டும் வகையில் அமைந்துள்ளன. இத்தன்மை அவற்றுக்கு இல்லாததால் இந்தோ ஐரோப்பிய 'வேர்கள்' இருள் மண்டிய பொருளற்ற வெறும் ஒலிக்குவியல்களாகவே தோன்றும். அவற்றுக்கும் தெளிவு தந்து ஒளிகாட்டி உயிரூட்டம் தரக்கூடியவை திராவிட மொழி வேர்கள் தாம். பிறமொழி வேர்களுக்கும் இக்கருத்துப் பெரும் அளவுக்குப் பொருந்துவதாகும்.

### திராவிடம் என்னுஞ்சொல்

த்ரமிளம் எனும் சொல்லின் சிதைவே தமிழாகும். த்ரமிடம், த்ரவிடம், த்ரவிள, தவிட எனும் சொற்கள் வடமொழி நூல்களில் மட்டுமே வழங்குகின்றன. தமிழ், திராவிடம் ஆகிய இரண்டும் வெவ்வேறு வடிவங்கள் என்று பாவாணர் தெளிவுபடுத்தி தமிழ் எனும்

சொல்லின் தோற்றத்தைப் பாவாணர் விளக்கியுள்ளார்.

## அகராதிப் பணிகள்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி உருவாக்கும் முயற்சியில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அகரமுதலித் திட்ட இயக்குநராகப் பொறுப்பேற்றார் பாவாணர். மலையினின்று கொட்டும் அருவிபோல பாவாணர் எனும் தமிழ் மலையினின்று கலைச்சொற்கள் அருவியாய்க் கொட்டின எனலாம்.

பாவாணர், ஒரு சொல்லுக்குத் தரும் விளக்கத்தில் சொல்லின் பல்வகைப் பொருள்கள் சொல் வளர்த்துப் பெருகும் வரலாறு தெரியும். ஒவ்வொரு காலகட்டத்திலும் அச்சொல்லுக்குரிய பொருள்கள், திரிபுகள், அச்சொல்லைச் சார்ந்த இலக்கியச் சான்றுகள் விளங்கும். வெவ்வேறு மொழிகளில் அவை வழங்கும் நிலைகள், இலக்கண விளக்கம் இவற்றையெல்லாம் காணமுடிகிறது. இவ்வாறு அவர் வகுத்த ஆப்பிள்–அரத்தி, ஸ்டூல்–மொட்டான், சிமெண்ட்– சுதைமா, ஏர்கண்டிசன் – செந்தணப்பு, ஃபுனல் – வைத்தூற்றி, பர்லாங் – படைச்சால், சிலுவை – குறுக்கை, மேப் – திணைப்படம், ஏசண்ட் –முகவர் முதலியன தமிழுக்குப் புதியனவாய்க் கிடைத்தன.

சொல்லாக்கும் அறிஞர்களுக்குத் தேவநேயப் பாவாணரின் ஒவ்வொரு நூலும் ஒரு பயிற்சிக்களனாகவும், தனித்தமிழ் அரணாகவும் இருக்கும் வகையில், தன்னுடைய உழைப்பில் கலைச்சொற்களைச் சொல் மழையாய்ப் பொழிந்தார் பாவாணர் எனில் மிகையில்லை. பாவாணரின் நூல்கள் யாவும் வேர்ச்சொல்லின் உயிர்நாடி எனக் கருதலாம். தேவநேயப் பாவாணர் 'அகரமுதலி'என்னும் பெயரைத் தமிழுலகில் நடையாடவிட்டார். அகரத்தை முதலாகக் கொண்டு அமைவதுதானே சொற்பொருள் உணர்த்தும் அகராதிநூல். முதற்குறளின் முதலிரு சீர்களாகிய 'அகரமுதல' என்பதனை முன்னோடியாகக் கொண்டே 'அகரமுதலி' என்னும் தமிழ்ப்பெயரை உருவாக்கினார் பாவாணர் எனக் கருதலாம்.

## தமிழ்த்தாயின் தலைமகன்

தமிழ்மொழி வளம் பெறவும், தமிழ்மக்கள் நலம் பெறவும் தம் வாழ்நாளை தமிழினத்திற்காகச் செலவு செய்தவர் பாவாணர். ஈராயிரம் ஆண்டுகள் இடிபாடுகளுக்குள் சிக்குண்ட தமிழகத்தை மீட்பதற்காகத் தமிழ்த்தாய் தவமிருந்து பெற்றெடுத்த தலைமகனார் பாவாணர். இவர் 40–க்கும் மேலான மொழிகளின் சொல்லியல்புகளைக்கற்று சொல்லாராய்ச்சிகள் செய்துள்ளார். மொழியியல் ஆய்வுலகில் தமிழ் மொழியில் தனி ஒளியைப் பாய்ச்சி, புதிய வெளிச்சத்தைக் காட்டிய மொழிப் பேரொளியாகப் பாவாணர் திகழ்ந்தார் எனலாம்.

## பாவாணர் வேர்ச்சொல்லாய்வு

தமிழில் உள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் அதன் பொருள்களையும், சான்றுகளையும் சிறப்பாகத் தமிழ் உலகுக்குக் கொடுத்துள்ளார் தேவநேயப் பாவாணர் அவர்கள்.

1.வடமொழியில் தென்னைக்கு நாலிகேர என்று பெயர். அதனின்று கேரளம் என்னும் சொல்லைத் திரிக்கவுஞ் செய்வர். நாலிகேர என்பது வடமொழியில் தன்னந் தனிச்சொல். அதற்கு அம்மொழியில் மூலமில்லை. கேரளம் என்பது சேரலம் என்பதன் திரிபாகயிருக்கவும், அத்திரிவைத் தலைகீழாகக் காட்டுவது வடமொழியாளர் வழக்கம்.

தென்னை இயற்கையாகத் தோன்றிய நிலம் குமரிநாடு. குமரிக் கண்டத் தென்பாக நாற்பத்தொன்பது நாடுகளுள் ஒருபகுதி ஏழ்தெங்கநாடு. தென்னை தென்கோடியில் தோன்றியதனாலேயே, தென்றிசை அடினாற் பெயர் பெற்றது.

தென்னுதல்–கோணுதல், சாய்தல், இயல்பாகக் கோணுவதனாலயே முடத்தெங்கு என்னும் அடைமுதற்சொல் எழுந்தது. தென்–தென்னை, தென்–தென்கு–தெங்கு. தென்=தென்னை, தென்– தெற்கு, ஒ,நோ: வடக்கு(வடம்+கு), கிழக்கு(கீழ்+கு), மேற்கு(மேல்+கு)

தென்னைக்கு நெய்தல் நிலம் மிக ஏற்றதாதலால் நெய்தல் மிக்க சேரநாட்டில்

தென்னை தொன்று தொட்டுச் சிறப்பாகச் செழித்தோங்கி வளர்கின்றது. தீயர்(தீவார்) இலங்கையினின்று வந்தவரேனும், தென்னை குமரிநாட்டு தொடர்புடையது.

2.அரிசி அல்லது நெல்லளக்கும்படி முதன்முதல் மூங்கிற்குழாயாலேயே அமைந்தது நுள் – நள் – நாள் – நாளம் –உட்டுளை. உட்டுளைப் பொருள், தண்டு, நாளம்–நாளி உட்டுளையுள்ள மூங்கில், புறக்காழுது,

நாளி–நாழி–மூங்கிற்படி, படி.

இப்படியாக ஒவ்வொருசொல்லுக்கும் பல பக்கங்கள் ஆய்வு செய்துள்ளது மிகவும் அருமை. தமிழ்த்துறையில் உள்ளவர்கள் மட்டும் அல்லாமல் மற்றவர்களும் வாங்கிப் படித்து, பல சொற்களின் வரலாற்றை அறிந்து கொள்ளலாம். பாவாணர் அவர்களின் உழைப்பை ஒவ்வொரு சொல்லிலும் பார்க்க முடியும்.(2)

## பாவாணர் அகரமுதலியின் தனித்தன்மைகள்

1.இந்நாள் வரை வெளிவந்துள்ள தமிழ் அகரமுதலிகளிலெல்லாம் இல்லாத எடுத்துக் காட்டிப் பொருள் கூறுதல்

2.ஏனை அகர முதலிலுள்ள தவறான சொல் வடிவங்களைத் திருத்துதல்

3.ஏனை அகர முதலிகளிலுள்ள சொற்களுக்கு விடுபாடுள்ள பொருள்களையெல்லாம் இயன்றவரை எடுத்துக் கூறுதல்

4.ஏனை அகர முதலிகளிலுள்ள தவறான பொருள்களைத் திருத்துதல்

5.எல்லாப் பொருள்களையும் ஏரண முறைப்படி (தருக்க முறைப்படி) வரிசைப்படுத்திக் கூறுதல்

6.எல்லாச் சொற்களுக்கும் இயன்றவரை திராவிட–ஆரிய இனச்சொற்களைக் காட்டுதல்

7. எல்லாச் சொற்களுக்கும் இயன்றவரை வேருடன் கூடிய வரலாறு வரைதல்

8.ஏனை அகர முதலிகளிற் குறிக்கப்பட்டுள்ள தவறான மூலங்களைத் திருத்துதல்

இவ்வெட்டு வகைத் தனித்தன்மைகளையும் பாவாணர் அகரமுதலியின் பயன்களாகக் கருதலாம் (3)

## முடிவுரை

பாவாணர் மொழி நூலறிஞர். பல மொழிகள் கற்றவர். தாய்மொழி மூலம் இலக்கியத் தொண்டாற்றியவர். இவரின் தனித்தமிழ்க் கொள்கை மற்றும் சொல்லாய்வுகள் தமிழர்களைப் புதுவரலாறு படைக்க வைக்கும் ஊக்க மருந்துகளாகவும், எவராலும் வீழ்த்தவியலா வேர்ச்சொல்லாய்வு அரண் கொண்ட ஆய்வுப் பேழைகளாகவும் விளங்குகின்றன என்பதை யாராலும் மறுக்க இயலாது அன்றோ!

## அடிக்குறிப்புகள்

1.தேவநேயப் பாவாணர் –தமிழ் விக்கிப் பீடியா,இணையம்

2.வேர்ச்சொற் கட்டுரைகள்–தேவநேயப் பாவாணர் பக் 687,

3.இந்திய இலக்கியச் சிற்பிகள் –இரா. இளங்குமரன்,பக் . 60,சாகித்திய அகாதெமி பதிப்பகம்.

## துணைநூல்கள்


பூம்புகார் பதிப்பகம்

1.பாவாணர் ஆய்வும், அகழ்வு ஆய்வும்– புலவர் இரா.இளங்குமரனார், சாகித்ய அகாதெமி பதிப்பகம்.

2.இந்திய இலக்கிய சிற்பிகள்– புலவர் இரா. இளங்குமரனார், சாகித்ய அகாதெமி பதிப்பகம்.

3.வேர்ச்சொற் கட்டுரைகள் – தேவநேயப் பாவாணர், பூம்புகார் பதிப்பகம்

# தேவநேயப் பாவாணரின் தமிழ்த் தொண்டை நினைவுகூர்வோம்



சென்னை, பிப். 7: மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் தமிழ்த் தொண்டை நினைவு கூர்வோம் என்று முதல்வர் மு.க.ஸ்டாலின் தெரிவித்துள்ளார். தேவநேயப் பாவாணரின் பிறந்த தினத்தையொட்டி, முதல்வர் மு.க.ஸ்டாலின் ட்விட்டரில் செவ்வாய்க்கிழமை வெளியிட்ட பதிவு:

தனித்தமிழ் இயக்கத்துக்கும், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்துக்கும் வாழ்நாளெல்லாம் உழைத்தவர் தேவநேயப் பாவாணர். தமிழ் வரலாறு, தமிழர் வரலாறு, தமிழர் மதம், தமிழர் திருமணம், திருக்குறள் உரை எனத் தமிழின் தனிச் சிறப்பை நிறுவ தனிமனிதப் பல்கலைக்கழகமாக அவர் பணியாற்றினார்.

அவர் ஆற்றிய அளப்பரிய தொண்டை அவரது பிறந்தநாளில் நன்றியோடு நினைவுகூர்கிறேன் எனத் தெரிவித்துள்ளார் முதல்வர் மு.க.ஸ்டாலின்.

நன்றி – தினமணி

## பாவாணர் புகழ் பாடு!

காவாது நலிந்திடுமா கனித்தமிழ் என்றுபலர்
கலங்கியேங்கிக் காத்திருந்த வேளை! – தமிழைக்
காத்திடவே வந்துதித்த மேதை! – என்றும்
கன்னல்நிகர் இனிமைகொண்ட கன்னித்தமிழ் பெருமைதனைக்
கருத்தாய்ந்து மொழிவதவர் வேலை!

முகிலாகி முத்தமிழின் மொத்தத்திறம் பொழிந்திட்டார்
மொழிஞாயிறு பாவாணரவர் பேரு! – அவர்
முந்துதமிழ் உருவாய்வந்த ஏறு! – தமிழை
மூலவேர் ஆய்ந்தறிந்து ஞாலமொழி என்றுரைத்த
மொழியறிஞர் பாவாணர்புகழ் பாடு!

முனைவர் வே. கார்த்திக்
07.02.2023



# மொழிஞாயிறு பாவாணர் பிறந்தநாள் விழா!



வேர்ச்சொல் ஆராய்ச்சியின் வழியே அருந்தமிழ்மொழியின் தொன்மையையும், தமிழ்மொழிக்கும் உலக மொழிகளுக்குமான சொல்லுறவு நிலையையும், உலக மொழிகளுக்குத் தமிழ்மொழி வழங்கிய சொற்கொடையையும் எடுத்துரைத்த "மொழிஞாயிறு" ஞா. தேவநேயப் பாவாணர் அவர்களின் 122ஆவது பிறந்தநாள் விழா செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 07.02.2023ஆம் நாள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற விழாவில், இயக்கக அலுவலர்கள் பணியாளர்கள் அனைவரும் பங்கேற்று, பாவாணரின் திருவுருவச் சிலைக்கு மலர்தூவிச் சிறப்புச் செய்தனர்.

அகரமுதலி இயக்கக மேனாள் பதிப்பாசிரியர் முனைவர் மு. கண்ணன் அவர்கள் கலந்துகொண்டு, பாவாணரின் தமிழ்த்தொண்டினை எடுத்துரைத்து, பாவாணர் வகுத்தளித்த வேர்ச்சொல்லாய்வுக் கோட்பாடுகளின்படி தமிழில் சொல்லாய்வுகளை முன்னெடுப்பதும், அவர்வழியில் தூயதமிழை வளர்த்தெடுப்பதுமே பாவாணரின் தமிழ்த்தொண்டுக்கு நாம் செய்யும் உண்மையான கைம்மாறாக இருக்கும் என்று கருத்துரை வழங்கிச் சிறப்பித்தார்.

# காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரியில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்







தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரி இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் –2022 நிகழ்வு 03.02.2023 ஆம் நாள் நடைபெற்றது. இந்நிகழ்வில் கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் இரா.கீதா அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி ஆட்சிக் குழுச்செயலர் திரு. பெரி.வீரப்பன் அவர்கள் முன்னிலைவகிக்க,கல்லூரி முதல்வர் மற்றும் பயிற்சி ஒருங்கிணைப்பாளர் முனைவர் செ.நாகநாதன் அவர்கள் தலைமையுரை ஆற்றினார், அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் சொற்குவை பற்றி சிறப்புரை ஆற்றினார். இந்நிகழ்வில் இயக்ககக் கண்காணிப்பாளர் திருமதி ஆ. மு.பிந்து, பதிப்பாசிரியர் கி.தமிழ்மணி , மேனாள் கண்காணிப்பாளர் ஆ.சுந்தரவரதன், ஓவியர் ச.கி.கணேசன் ஆகியோர் உடன் இருந்தனர். நிறைவாக, கல்லூரி உதவிப் பேராசிரியர் முனைவர் கு.அன்பு மெய்யப்பன் அவர்கள் நன்றியுரை கூறினார். நிகழ்வின் நிறைவில் மாணவர்களுக்குச் சொற்குவை மாணவத் தூதுவர் சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 127–ஆவது கூட்டம்




16.02.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 127–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். நூல் மதிப்புரையாளரான கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 232 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 128–ஆவது கூட்டம்



20.02.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 128–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு.அ.மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர்.நிகழ்வில், இலங்கை – சுங்கத்திணைக்கள அலுவலர் திரு.நடராசா சிறிரஞ்சன், நார்வே – மகேந்திரராசா சுரேந்திரன் ஆகியோர் சிறப்பு விருந்தினர்களாகக் கலந்துகொண்டனர். சிறப்பு விருந்தினர்களுக்கு அகரமுதலி இயக்ககத்தின் வெளியீடுகளை இயக்குநர் அவர்கள் வழங்கிச் சிறப்பித்தார்.கூட்டத்தில், அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 247 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), ஆவடி, புனித பீட்டர் உயர்கல்வி (ம) ஆராய்ச்சி நிறுவனத் தமிழ்த்துறை மாணவ – மாணவிகளுக்குக் கலைச்சொல்லாக்கம் மற்றும் தூயதமிழ்ப் பயன்பாடு குறித்தும் 10நாள்கள்பயிற்சிபெற்ற இந்தமாணவ–மாணவிகளுக்குச் வேர்ச்சொல்லாய்வுகள், கலைச்சொல்லாக்கங்கள், தூயதமிழ்ப் பயன்பாடு, அகராதிகளின் தேவை, சொற்குவைப் பயன்பாடு உள்ளிட்டவை குறித்தும் எடுத்துரைக்கப்பட்டது.

16.02.2023ஆம் நாள் நிகழ்வில், தொல்காப்பியர் தமிழ்ச்சங்கத் தலைவர் புலவர் வெற்றியழகனார் கலந்துகொண்டு அகப்பயிற்சி பெறும் மாணவ–மாணவிகளுக்கு அடிப்படைத் தமிழ் இலக்கணத்தை விளக்கியுரைத்து, தமிழைப் பிழையின்றிப் பேசவும் எழுதவும் பயிற்சியளித்தார்.

கடந்த 06.02.2023ஆம் நாள்முதல் அகப்பயிற்சி பெற்றுவரும் மாணவ–மாணவிகளுக்கு அகராதிகளின் தேவை, சொற்குவைப் பயன்பாடு என்ற தலைப்பில் இயக்ககத் தொகுப்பாளர் திரு. வே.பிரபு அவர்கள் எடுத்துரைத்து பயிற்சியளித்தார். அதைத் தொடர்ந்து கலைச்சொல்லாக்கங்கள்,தூய தமிழ்ப் பயன்பாடு என்ற தலைப்பில் முனைவர் வே. கார்த்திக் அவர்கள் பயிற்சி அளித்தார்.மற்றும் கலைச்சொல்லாக்கமும் மொழிபெயர்ப்பும் என்ற தலைப்பில் முனைவர் தி. பாலசுப்பிரமணியம் அவர்கள் பயிற்சியளித்தார். பயிற்சி பெற்ற மாணவ– மாணவிகளுக்கு நிறைவு நாளான இன்று (17.02.2023) செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் அரசு சான்றிதழ் வழங்கிச் சிறப்பித்தார்.

# நிலச் சீர்த்திருத்த ஆணையரகத்தில் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம்





சென்னை, சேப்பாக்கம் நிலச் சீர்த்திருத்த ஆணையரகத்தில் (15.02.2023) நடைபெற்ற துறைசார் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம் நடந்தது. இக்கூட்டத்தில் உதவி ஆணையர் நிலை–1 திரு.பு. சுப்புராஜ் அவர்கள் கலந்துகொண்டு தலைமையுரை நிகழ்த்தினார். நிலச் சீர்திருத்த ஆணையரகத்தின் உதவி ஆணையர் நிலை–3 திருமதி சி.கீதாலட்சுமி அவர்கள் வரவேற்புரை ஆற்றினார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் துறைசார் புதிய கலைச்சொற்கள் பற்றி நோக்கவுரையாற்றினார். ஆணையரகத்தின் உதவிச் செயலாளர்கள், கண்காணிப்பாளர்கள், நேர்முக உதவியாளர்கள் மற்றும் அலுவலர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தார்கள். நிகழ்வின்போது இத்திட்டத்தின் ஒருங்கிணைப்பாளர் வே.பிரபு மற்றும் இயக்ககத் தொகுப்பாளர் கி.இராமர், பதிப்பாசிரியர் கி.தமிழ்மணி ஆகியோர் உடனிருந்தனர்.

# உலகத் தாய்மொழி நாள் – 2023

## டிரீம் இந்தியா தொழிற் பயிற்சி நிலையத்தில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்










தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் டிரீம் இந்தியா தொழிற் பயிற்சி நிலையம் திருவள்ளூர் இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்ட நிகழ்வு 21.02.2023 ஆம் நாள் நடைபெற்றது. இந்நிகழ்வில் ஆசிரியர் திரு.ம.நரசிம்மன் அவர்கள் வரவேற்புரை வழங்க, தொழிற் பயிற்சி நிலையத்தின் துணை முதல்வர் திரு.கி.உதயகுமார் அவர்கள் முன்னிலை வகிக்க , தொழிற் பயிற்சி நிலையத்தின் முதல்வர் மற்றும் பயிற்சி ஒருங்கிணைப்பாளர் திரு.தினகர் பாபு அவர்கள் தலைமையுரை ஆற்றினார்,

அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்கள் பிப்ரவரி 21ஆம் நாள் உலகத்தாய் மொழி நாளைப் பற்றியும் மற்றும் சொற்குவை பற்றியும் உறவுமுறைப் பெயர்களைத் தமிழிலேயே சொல்லி அழைக்க வேண்டும்! உலகத் தாய்மொழி நாள் விழாவில் "உறவுகளைத் தமிழில் சொல்லி அழையுங்கள்" என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினார். அப்போது,தாய்மொழியே மனித இனத்தின் முதல் அடையாளமாகும். ஒரு மொழி என்பது அவன் வாழக்கூடிய சமூகத்தின் பிரதிபலிப்பு ஆகும். தாய்மொழி வழியே தான் ஒருவனின் பண்பாடு, பழக்கவழக்கங்கள், கலை, நாகரீகம், உடை, உணவு, உறவுகள் அனைத்தும் அவன் வாழ்வியலோடு சேர்ந்தே இருக்கும். எனவேதான் எந்த மொழி யார் யாருக்குத் தாய்மொழியும் அந்த மொழி பாதுகாக்கப்பட வேண்டும் என்பதே இந்த நாளின் உன்னத நோக்கமாகும். 1952 ஆம் ஆண்டு பிப்ரவரி 21ஆம் நாள் கிழக்கு வங்காளத்தில் நடைபெற்ற மொழிக்காப்பு போராட்டத்தில் உயிர் நீத்த மாணவர்கள் அப்துல் சலாம், அப்துல் பர்கெத், இரபீக் அகமது, அப்துல் சபார் ஆகியோரின் மொழிக்காப்பு உணர்வினைப் போற்றும் வகையில்தான், 1999 ஆம் ஆண்டு ஐக்கிய நாட்டு அவை நாடு முழுவதும் தாய் மொழிகளைப் பாதுகாக்க வேண்டும் என்கின்ற சீரிய சிந்தனையுடன் ஒவ்வோராண்டும் பிப்ரவரி 21ஆம் நாள் உலகத் தாய்மொழி நாள் கொண்டாடப்பட ஆவன செய்தது. இந்தப் போராட்டத்தின் விளைவு உலகத் தாய்மொழி நாளை ஒவ்வொரு இனத்தினரும் எண்ணிப் பார்க்க வேண்டும் என்பதற்காக மட்டுமல்லாமல், தான் பேசக்கூடிய மொழியின் வழியே மதமாக இருந்தாலும் சமூக பழக்க வழக்கங்களாக இருந்தாலும் அனைத்தும் அமைய வேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்தும் நாளாக உலகத் தாய்மொழி நாள் அமையும் என்பதில் எவ்வித மாற்றம் இல்லை.

மேலும் அவரவர் தாய்மொழியே ஆட்சி மொழியாக அமைய வேண்டும் என்பதிலும் பெரும்பான்மையான மக்கள் பேசக்கூடிய மொழி எதுவோ அதுவே நம் மாநிலத்தின் ஆட்சி மொழியாக அமைய வேண்டும் என்ற எண்ணத்தையும் வங்காள மாணவர்களின் போராட்டம் நமக்கு உணர்த்துகிறது. எனவே மாணவச் செல்வங்கள் தங்கள் சார்ந்திருக்கிற தொழில்முறைக் கல்வியாக இருந்தாலும், கலையியல் பிரிவு கல்வியாக இருந்தாலும் நீங்கள் படிக்கின்ற கற்றல்மொழி வேறு மொழியாக இருந்தாலும் அதைத் தமிழில் படிப்பதற்கும், புரிந்து கொள்வதற்கும், புரிந்து கொண்டதைப் பொது மக்களுக்கு எடுத்துரைப்பதற்கும் அவரவர் தாய்மொழியை நாம் பயன்படுத்த வேண்டும் என்கின்ற எண்ணம் நமக்கு மேலோங்க வேண்டும். அந்த வகையில் ஒரு மொழியின் பாதுகாப்பு சீர் பெற்றதாக அமைய வேண்டும் என்பதால் அகரமுதலித் திட்ட இயக்ககம் இது வரையில் 8,66,063 சொற்களைத் தொகுத்து "சொற்குவை" எனும் வலைதளத்தில் பதிவிட்டு இருக்கிறது. தாய்மொழி நமக்குத் தமிழே ஆகும். தமிழ் மொழியை இல்லத்திலும், உண்ணும் உணவகத்திலும், உறவுமுறைப் பெயரைச் சொல்லி அழைப்பதிலும், பொது இடங்களிலும், நம் தமிழ்மொழியை அச்சமின்றி கூச்சம் இல்லாமல் பயன்படுத்த வேண்டும் என்பதை இந்த நாளில் உங்களிடையே வேண்டுகோளாக வைப்பதை எனது கடமையாக கருதுகிறேன். நாம் தமிழர் என்கின்ற அடையாளமாக நமக்கு நாம் சூட்டிக் கொள்கிற பெயராக இருந்தாலும், நாம் வாழ்கின்ற இடமாக இருந்தாலும் அவை அனைத்தும் தமிழில் அமைய வேண்டும். நம்முடைய கையொப்பமாக இருந்தாலும், சுருக்கொப்பமாக இருந்தாலும் அது தமிழில் மட்டுமே அமைவதற்கு நாம் இன்று இப்பொழுதே இந்த இனிய நாளில் முடிவெடுக்க வேண்டும் என்று கூறி சிறப்புரை ஆற்றினார்.

இந்நிகழ்வில் இயக்கக தொகுப்பாளர் திரு.வே.பிரபு அவர்கள் சொற்குவைப் பற்றி விளக்க உரையாற்றினார். ஆசிரியர் திரு. வின்சென்ட் சுரேஷ் ஆகியோர் உடன் இருந்தனர். நிறைவாக, டிரீம் இந்தியா தொழிற்பயிற்சி நிலையத்தின் ஆசிரியர் ஜெயகுமரகுருபரன் அவர்கள் நன்றியுரை கூறினார். நிகழ்வின் நிறைவில் மாணவர்களுக்குச் சொற்குவை மாணவத் தூதுவர் சான்றிதழ்கள், தமிழ் அகராதிகள் வழங்கப்பட்டன.

# ஆதிதிராவிடர் நல இயக்குநரகத்தில் புதிய கலைச்சொற்கள் குறித்த கலந்தாய்வுக் கூட்டம்





சென்னை, சேப்பாக்கம் ஆதிதிராவிடர் நல இயக்குநரகத்தில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில்(23.02.2023) துறைசார் புதிய கலைச்சொற்கள் கலந்தாய்வுக் கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தில் ஆதிதிராவிடர் நல இயக்குநரகத் துணை இயக்குநர் (கல்வி)திரு.க.இராஜா ஜெகஜீவன், மண்டில உதவி இயக்குநர் திரு.பொன் நடராஜன், கண்காணிப்பாளர் திருமதி.மா.செல்வ பாரதி ஆகியோர் கலந்து கொண்டனர். மற்றும் அகரமுதலி இயக்ககத் தொகுப்பாளர் வே.பிரபு உடன் இருந்தார்.

# மதுரை – உலகத் தமிழ்ச் சங்கத்தில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்














தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் மதுரை – உலகத் தமிழ்ச் சங்கம் இணைந்து நடத்திய "சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் – 2023" நிகழ்வு 27.08.2023 ஆம் நாள் சிறப்பாக நடைபெற்றது. உலகத் தமிழ்ச் சங்கக் கூட்டரங்கில் நடைபெற்ற நிகழ்வில், உலகத் தமிழ்ச் சங்க ஆய்வு வளமையர் திருமதி. ஜ.ஜான்சிராணி வரவேற்புரை வழங்க, உலகத் தமிழ்ச் சங்க இயக்குநர் முனைவர் ப. அன்புச்செழியன் அவர்கள் தலைமையுரையாற்றினார். மதுரை முகையதஷா சர்குரோ வக்பு வாரியக் கல்லூரி, மதுரை, மங்கையர்க்கரசி கலை (ம) அறிவியல் கல்லூரி, மதுரை, செந்தமிழ்க் கலை (ம) கீழ்த்திசைக் கல்லூரி ஆகிய 3 கல்லூரிகளைச் சேர்ந்த மாணவ– மாணவிகள் பங்கேற்ற இந்நிகழ்வில், அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் பங்கேற்று, சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டத்தின் நோக்கம் குறித்து எடுத்துரைத்தார்.

இயக்ககத் தொகுப்பாளர் வே. பிரபு, சொற்குவை பற்றி விளக்கவுரையாற்றினார். இந்நிகழ்வில் கலந்துகொண்டு பயிற்சிபெற்ற மாணவ– மாணவிகளுக்குச் சொற்குவை மாணவத் தூதுவர் சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

# இரக்கும் வகைகளும், ஈயும் வகைகளும்

ஈ என்று இரத்தல் இழிந்தோன் செயல்; தா என்று கேட்டல் ஒத்தோன் செயல்; கொடு என்று கட்டளையிடுதல் உயர்ந்தோன் செயல்.

"ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே"

"தா என் கிளவி ஒப்போன் கூற்றே"

"கொடு என் கிளவி உயர்ந்தோன் கூற்றே"

(எச்சவியல், 49–50–51)

என்பன தொல்காப்பியம். ஆதலால், ஈதல் என்பது இழிந்தோர்க்களித்தல்; தருதல் என்பது ஒத்தோர்க் களித்தல்; கொடுத்தல் என்பது உயர்ந்தோர்க்களித்தல்.

அளித்தல் என்பது அன்பினாற் கொடுத்தலையும், இடுதல் என்பது கீழிட்டுக் கொடுத்தலாகிய இரப்போர்க் கீதலையும், வழங்கல் என்பது எடுத்துக்கொடுத்தலையும் குறிக்கும். அருளுதல் என்பது அருளிக் கொடுத்தல்.

நன்றி : பாவாணர் தமிழ்க்களஞ்சியம் – 21

# மதுரை – தியாகராசர் கல்லூரியில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம்





தமிழ்நாடு அரசு, தமிழ்வளர்ச்சித்துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மற்றும் மதுரை – தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறை இணைந்து நடத்திய "சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் – 2023" நிகழ்வு 28.08.2023 ஆம் நாள் சிறப்பாக நடைபெற்றது. தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறையின் பண்டிதமணி அரங்கில் நடைபெற்ற நிகழ்வில், தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர் சீ. சரவணஜோதி அவர்கள் வரவேற்புரை வழங்க, கல்லூரி முதல்வர் முனைவர் து. பாண்டியராஜா அவர்கள் தலைமையுரையாற்றினார். தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் இரா. மலர்விழி மங்கையர்க்கரசி முன்னிலையுரையாற்ற, தமிழ்நாடு அரசு, பள்ளிக் கல்வித்துறை இணை இயக்குநர் முனைவர் பொன். குமார் அவர்கள் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கினார். நிகழ்வில், அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் பங்கேற்று, சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டத்தின் நோக்கம் மற்றும் செயலாக்கம் குறித்து எடுத்துரைத்தார். இயக்ககத் தொகுப்பாளர் வே. பிரபு, சொற்குவை பற்றி விளக்கவுரையாற்றினார். இந்நிகழ்வில் கலந்துகொண்டு பயிற்சிபெற்ற மாணவ– மாணவிகளுக்குச் சொற்குவை மாணவத் தூதுவர் சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

# தமிழ்நாடு அரசின் தமிழ்வளர்ச்சிப் பணிகள் விளக்கக் கருத்தரங்கம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 01.03.2023ஆம் நாள், தமிழ் எழுச்சி நாளை முன்னிட்டு "தமிழ்நாடு அரசின் தமிழ்வளர்ச்சிப் பணிகள் விளக்கக் கருத்தரங்கம் நடைபெற்றது.

அகரமுதலி இயக்ககக் கூட்டரங்கில் நடைபெற்ற கருத்தரங்கில் இயக்ககப் பதிப்பாசிரியர் முனைவர் தி. பாலசுப்பிரமணியன் அவர்கள் வரவேற்புரை வழங்க, அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையுரையாற்றினார்.

இக்கருத்தரங்கில் இராஜ் தொலைக்காட்சி "அகடவிகடம்" நிகழ்ச்சியின் நடுவர் கவிஞர் நாகை. நாகராசன் அவர்கள் சிறப்பு விருந்தினராகக் கலந்துகொண்டு "தாய்த்தமிழ் வளர்ச்சியில் தலைநிமிரும் தமிழ்நாடு" என்னும் பொருண்மையில் சிறப்புரை வழங்கினார்.

அவர் தம் உரையில், மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு. மு.கஸ்டாலின் அவர்களின் செயல்பாடுகள் அனைத்தும் தமிழ்மொழி – தமிழர் நலன் சார்ந்தே இருக்கின்றன என்றும், தமிழ்வளர்ச்சிப் பணிகளின் செயலாக்கங்களுக்கு மாண்புமிகு தமிழ்ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு மற்றும் தொல்லியல்துறை அமைச்சர் திரு. தங்கம் தென்னரசு அவர்களின் சீரிய வழிகாட்டுதலும் பெரிதும் ஊக்கமாக அமைகின்றன என்றும் தெரிவித்தார்.

இன்றைய தலைமுறையினர் தமிழ் அறிஞர்களின் பெருமையைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக மாவட்டந்தோறும் அப்பெருமக்களின் பிறந்தநாளில் மாணவர்களுக்குப் பேச்சு – கவிதை – கட்டுரை போட்டிகளை நடத்துதல், பெண்குழந்தைகள் 12ஆம் வகுப்புக்குப்பின் கல்லூரிப் படிப்பைத் தொடர "புதுமைப்பெண்" திட்டத்தின்கீழ் மாதந்தோறும் ஆயிரம் ரூபாய் வழங்குதல், தமிழ் எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் வகையில் 5 இலட்சம் பரிசுத்தொகையுடன் "இலக்கிய மாமணி விருது" வழங்குதல், தமிழ்நாட்டில் தமிழ்நாடு அரசுப் பணியை நாடுவோர் இனி தமிழ்மொழிப் பாடத்தில் கட்டாயம் தேர்ச்சிபெற வேண்டும் என்று ஆணை பிறப்பித்தல்,தமிழ்வழியில் பயின்றோர்க்கு வேலைவாய்ப்பில் முன்னுரிமை வழங்க வகைசெய்தல், மாணவர்களை நல்வழிப்படுத்த " சிற்பி" திட்டம் செயற்படுத்தல் உள்பட தமிழ்மொழி – தமிழர் நலன் சார்ந்த எண்ணற்ற அரிய பல ஆக்கத் திட்டங்களை மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு. மு.க.ஸ்டாலின் அவர்கள் செயற்படுத்திவருவதாக கவிஞர் நாகை. நாகராசன் அவர்கள் தெரிவித்தார்.

அகரமுதலி இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள், மேனாள் பதிப்பாசிரியர் முனைவர் மு. கண்ணன் உள்ளிட்டோர் கலந்துகொண்ட கருத்தரங்கத்தில் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்திக் நெறியாளுகை செய்ய, நிறைவாக, தொகுப்பாளர திருமதி ஜெ. சாந்தி நன்றியுரை கூறினார்.

# மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்டப் பயிலரங்கம்!





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் உருவாக்கிவரும் மருத்துவக் கலைச்சொல் அகராதித் தொகுப்புத் திட்டப் பயிலரங்கம் அகரமுதலி இயக்ககத்தில் 04.03.2023ஆம் நாள் நடைபெற்றது. 30 மருத்துவ வல்லுநர்கள் பங்கேற்று, மருத்துவக் கலைச்சொல் அகராதி சிறப்புற வெளிவருவதற்கான கருத்துரைகளை வழங்கினார்கள்.

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வழியாக, ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்க் கலைச்சொல் அகராதி உருவாக்கி வெளியிட இசைவளித்து தமிழ்நாடு வெளியிட்டுள்ள அரசாணையின்படி, அகரமுதலி இயக்ககமானது, தமிழ்நாடு பாடநூல் (ம) கல்வியியல் பணிகள் கழகத்துடன் இணைந்து, துறைசார் வல்லுநர்களைக் கொண்ட குழுக்களை அமைத்து, ஆண்டுக்கொரு துறையைத் தேர்வுசெய்து கலைச்சொல் அகராதிகளை உருவாக்கி வெளியிடவுள்ளது. அதன்படி நடப்பாண்டில் முதற்கட்டமாக மருத்துவக் கலைச்சொல் அகராதி உருவாக்கப் பணி நடைபெற்றுவருகிறது.

இவ்வகராதித் தொகுப்புத் திட்டப் பயிலரங்கம் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தம் தலைமையுரையில், வருங்காலங்களில் மாணவர்கள் தாய்த்தமிழில் மருத்துவம் பயில மருத்துவக் கலைச்சொல் அகராதி பெரும் துணையாக அமையும் என்று நம்பிக்கை தெரிவித்தார். அகராதித் தொகுப்புத் திட்ட மொழி வல்லுநர் முனைவர் மு. கண்ணன் அவர்கள் வரவேற்புரை வழங்க, தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் பணிகள் கழக இணை இயக்குநர் முனைவர் ச. சங்கர சரவணன் அவர்கள் சிறப்புரையாற்றினார். அவர்தம் உரையில், கலைச்சொல்லாக்கம் என்பது வெறுமனே நேரடி மொழிபெயர்ப்பாக, இயந்திர மொழிபெயர்ப்பு போல் அமையாமல் இடம்நோக்கி, பயனாளர் நோக்கி, மண்ணின் மரபுசார்ந்து, பொருத்தமான பொருளுள்ள வகையில் அமைய வேண்டும் என்று தெரிவித்தார்.

வாழ்த்துரை வழங்கிய பேரா. மரு. இளங்கோவன் அவர்கள், பழந்தமிழ் இலக்கியச் சொற்களிலிருந்தும் காலத்திற்கேற்ற புதிய கலைச்சொல்லாக்கங்களை நாம் உருவாக்க முடியும் என்றும், நாம் இப்போது உருவாக்கும் கலைச்சொற்களை எதிர்வரும் இளைய தலைமுறையினர் இன்னும் சீர்மைசெய்வார்கள் என்றும் தெரிவித்தார்.

அவரைத்தொடர்ந்து வாழ்த்துரை வழங்கிய மரு. ஜான் சாலமன் அவர்கள், இங்கிலாந்தில் உள்ள இராயல் மருத்துவக் கல்லூரியில் நான் மருத்துவம் பயிலும் நேரத்தில், Healing Medicine எனும் ஆறல் மருத்துவப் பாடவேளையில் அந்நாட்டு வேதம் ஓதப்படுகிறது. வேதம் ஓதுவது இரண்டுமொழிகளில் மட்டுமே நடைபெறுகிறது. ஒன்று ஆங்கிலம் மற்றொன்று தமிழ்மொழி. ஆறல் மருத்துவம் (Healing Medicine) செய்யும்போது, நோயர்கள் நோய் மறந்து குணமடைகிற காட்சிகளை நான் கண்டிருக்கிறேன். ஆங்கிலம் மட்டுமே வழங்கிவருகிற இங்கிலாந்து நாட்டில், உலக மொழிகளில் தமிழில் மட்டுமே ஆறல் மருத்துவம் செய்யப்படுவதை எண்ணி தமிழன் என்ற முறையில் நான் பெருமைப்படுகிறேன். பழந்தமிழ் மருத்துவ ஓலைச்சுவடிகளிலுள்ள சொற்களை ஆய்ந்து மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவர வேண்டும். தமிழில் கலைச்சொல் என்பது, காரண காரியத்தோடுதான் அமைக்கப்பெறுகிறது. இந்தப் பெருமை வேறு எந்த மொழிக்கும் இல்லை என்பதை உணர்ந்து, தமிழ்நாடு முன்னெடுக்கும் இந்த மருத்துவக் கலைச்சொல் அகராதித் திட்டத்தில் ஆர்வமுள்ள மருத்துவ வல்லுநர்கள் குழுவாக இணைந்து செயலாற்றினால் தமிழில் மருத்துவக் கல்வி என்பது விரைவில் கனியும் என்று தெரிவித்தார்.

பயிலரங்கில், மருத்துவர்கள் அமுதகுமார், இந்திரா, இளங்கோவன், கலைவாணி, குமரேசன், சுதா மகேஸ்வரி, பாக்கம் தமிழன், புவனேஸ்வரி, ஸ்ரீவித்யா, செந்தில்வடிவு ஆகியோர் கலந்துகொண்டு, மருத்துவக் கலைச்சொல் அகராதிக்காகத் தொகுக்கப்பட்ட கலைச்சொற்கள் மீதான தங்கள் கருத்துரைகளை வழங்கிச் சிறப்பித்தார்கள். ஒவ்வொரு துறைக்குமான கலைச்சொல் அகராதி உருவாக்குவது காலத்தின் தேவை என்றும், அவ்வாறு உருவாக்கும்போது துறைசார் வல்லுநர்களும், மொழிப் புலமையோர் இணைந்து கலைச்சொற்களை வடிவமைத்துச் சீராக்கம் செய்து அகராதி வெளியிட வேண்டும் என்றும் மருத்துவ அறிஞர்கள் கருத்துரை வழங்கினார்கள். இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற பயிலரங்கின் நிறைவில், தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்திக் நன்றி கூறினார்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"நன்று தமிழ் வளர்க! தமிழ்
நாட்டினில் எங்கணும் பல்குக! பல்குக!
என்றும் தமிழ் வளர்க – கலை
யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக"

– பாவேந்தர் பாரதிதாசன்

மொழியின் வளம் காட்டும் அளவுகோல் அதன் சொற்களே ஆகும். அருந்தமிழின் சொல்வளத்தில் காலந்தோறும் கலைச்சொற்கள் இன்றியமையாப் பங்குவகித்துள்ளன. இந்நிலையில், இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களின் துணையோடு தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில் நடத்தப்பெறும் இப்பயிலரங்கத்தின் 71–75 வரையிலான அமர்வுகள் 2023 பிப்பிரவரி 03, 10, 17, 24, மார்ச்சு 03 ஆகிய நாள்களில் நடைபெற்றன. 75ஆவது அமர்வில், கனடா, வாட்டர்லு பல்கலைக்கழகப் பேராசிரியர் செ.இரா. செல்வக்குமார், பாரிசு, பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேராசிரியர் ச. சச்சிதானந்தம், மதுரை காமராசர் பல்கலைக்கழக மொழியியில (ம) தொடர்பியல் புல மேனாள் புலத்தலைவர் முனைவர் வீ. ரேணுகாதேவி, பாரிசு, பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவன நிருவாக இயக்குநர் திருமதி ஞானா பியாற்றிசு ஆகிய அறிஞர்கள் பங்கேற்று வாழ்த்துரை வழங்கிச் சிறப்பித்தார்கள். பல்பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொல்லாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 03.02.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பொறிஞர் சத்யன்**
மின்பொறியியல் மேற்பார்வையாளர்,
குவைத் தேசிய கன்னெய் தூய்விப்பாலை,
குவைத்



**முனைவர் இரா. பரமேஸ்வரி**
பேராசிரியர், கணினி அறிவியல் துறை,
வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப
உயர் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை



**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம்,
பாரிசு



**திருமதி வெ. காயத்ரி**
மொழிபெயர்ப்பாளர், கோயம்புத்தூர்



## 10.02.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. நடராசா சிறிரஞ்சன்**
சுங்கத் திணைக்கள அலுவலர், இலங்கை



**பாவரசு வதிலை பிரதாபன்**
தலைவர், மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் மன்றம்



**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர், தைவான் தமிழ்ச் சங்கம், தைவான்



**முனைவர் மோ. பார்த்தசாரதி**
துறைத்தலைவர், இயற்பியல் துறை, வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை



**முனைவர் மெய். சித்ரா**
பகுதிநேர விரிவுரையாளர், ஸ்கோப், ஹாங்காங் மாநகர் பல்கலைக்கழகம், ஹாங்காங்



## 17.02.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பொறிஞர் கு. பாலசுப்பிரமணியன்**
இரும்புக் கட்டுமானத் தொழில் தலைவர், வியட்நாம்



**முனைவர் சு. சந்திரசேகரன்**
மேனாள் பேராசிரியர், கணிப்பொறியியல் (ம) தமிழ்மொழி, வடவள்ளி, கோயம்புத்தூர்



**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம், பாரிசு



## 24.02.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**முனைவர் மாலினி ஆனந்த கிருஷ்ணன்**
மனநல வழிகாட்டி, சிட்னி, ஆஸ்திரேலியா



**முனைவர் இரா. சேகர்**
வருகைதரு பேராசிரியர், பண்டைய வரலாறு (ம) தொல்லியல்துறை, சென்னை



**திரு. த. சுதாகரன்**
வழக்கறிஞர், பிரான்சு



**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**
உரையாசிரியர், நூல் மதிப்புரையாளர், சென்னை



## 75ஆவது அமர்வில் வாழ்த்துரை வழங்கிய அறிஞர்கள்



**பேரா. செ.இரா. செல்வக்குமார்**
வாட்டர்லு பல்கலைக்கழகம்,
கனடா



**முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்**
வாட்டர்லு பல்கலைக்கழகம்,
கனடா



**திருமதி ஞானா பியாற்றிசு**
நிருவாக இயக்குநர்
பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு
நிறுவனம், பாரிசு



**முனைவர் பேரா. வீ. ரேணுகாதேவி**
மேனாள் புலத்தலைவர்,
மொழியியல் [ம] தொடர்பியல் புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை

## 03.03.2023ஆம் நாள் நடைபெற்ற 75ஆவது அமர்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. பா. துவாரகன்**
பொறுப்பு அலுவலர், யாழ்ப்பாண மருத்துவ
அருங்காட்சியகம் (ம)
தொலை மருத்துவப் பிரிவு, இலங்கை



**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர், தைவான் தமிழ்ச் சங்கம்,
தைவான்



**பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்**
ஹன்யாங் பல்கலைக்கழகம், சீயோல்,
தென்கொரியா



**முனைவர் மு. கண்ணன்**
மொழி வல்லுநர், மருத்துவக்
கலைச்சொல் அகராதித் தொகுப்புத்
திட்டம், அகரமுதலி இயக்ககம்,
சென்னை



**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம்,
பாரிசு

## அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

### பொறிஞர் சத்யன்

Dia Magnetism – சுழிமாழை மறைப்பாயம்
Para Magnetism – மங்குமாழை மறைப்பாயம்
Ferro Magnetism – அடர்மாழை மறைப்பாயம்

### பொறிஞர் பத்மப்ரியா இராகவன்

Nap box – துயில்பெட்டி
Warm bank – வெப்பகம்
Letterlocking – மடல்மடிப்பு/ உறைமடல்

### முனைவர் இரா. பரமேஸ்வரி

Bidirectional Associative Memory – இருவழி இணைப்பு நினைவகம்
Vector Quantization(VQ) – திசையன் அளவுப்படுத்தல்
Bipolar Encoding – இருமுனைக் குறியாக்கம்

### திருமதி வெ. காயத்ரி

Biennial rotation – ஈராண்டு பயிர் சுழற்சி
Cow Calf Operation – மந்தை வளர்ப்பு
Bareroot – நடவுப் பயிர்

## திரு. நடராசா சிறிரஞ்சன்

Duty waiver – தீர்வை விலக்களிப்பு
Preferential Duty – முன்னுரிமைத் தீர்வை
Depreciation – பெறுமானத் தேய்வு

## முனைவர் ஜெ. வினாயகம்

Benzene – ஆகநீவம்
Benzoin – ஆகநீவைன்
Benzaldehyde – ஆகநீர்நீக்குயிரியல்

## முனைவர் மெய். சித்ரா

Ring of Solomon – மேநாற்சுழிமுடிச்சு
Extended shield knot– விரிசுழிவளைமுடிச்சு
Flower of life – வாழ் மலர்

## பாவரசு வதிலை பிரதாபன்

Patience – சீற்றமிலான்
Prudence – முன்னறிவன்
Gratitude – மாற்றன்பு

## முனைவர் மோ. பார்த்தசாரதி

Polariser – தள விளைவாக்கி
Logic Gates – ஏரண நுழைவு
Radiology – ஊடுகதிரியக்கவியல்

## பொறிஞர் கு. பாலசுப்பிரமணியன்

Empty love – வெற்றுக் காதல்
Romantic love – கசிந்துருகும் காதல்
Familial love – குடும்பக் காதல்

## பொறிஞர் பத்மப்ரியா இராகவன்

Attaboy – வியப்பாடவன்
Attagirl – வியப்புப்பாவை
Bettabilitarianism – பந்தயக்கோட்பாடு நெறி

## முனைவர் சு. சந்திரசேகரன்

Actuators – (மின்) இயக்கி
Cellular network – நுண்கூட வலை
Traceability – தொடர்காண் திறன்

## முனைவர் மாலினி ஆனந்த கிருஷ்ணன்

Spirituality – பேரறிவுத்தன்மை
Dementia – நினைவுப்பிறழ்வு
Emotional – உணர்வு மேலீடு

## திரு. த. சுதாகரன்

Saving account – தேட்டக் கணக்கு
Current account – நடைமுறைக் கணக்கு
Over rafts – மேலதிக வரைவுகள்

## முனைவர் இரா. சேகர்

பட்டிகை – அரைக்கச்சை
குளகம் – முகத்தல் அளவு
கண்டீரம் – மிளகு

## கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு

Bookmark – இணைய முகவரிக் குறிப்பு
Booty – களவுப் பொருள் தொகுப்பு
Dainty – மெல்லழகு

## திருமதி வெ. காயத்ரி

Extreme weather – இடர் வானிலை
Free – range – திறந்தவெளிப் பண்ணை
Hyper – local food – அருகமை தோட்டம்

## திரு. பா. துவாரகன்

Axis of oscillation – அலைவச்சு
Set – தொடை
Normal Section – செவ்வன் துணிப்பு

## பேரா. முனைவர் பெ. ஹரிபாலன்

Nanodrop – மீநுண்துளி அளவி
Centrifuge – நடுவிலக்குப் பிரிப்பி
Buffer – தாங்கல்

## பொறிஞர் பத்மப்ரியா இராகவன்

Cakeism – முரணவா
Superdodger – தொற்றுறாதோர்
Techlash – தொழில்நுட்பச்சலிப்பு

## முனைவர் ஜெ. வினாயகம்

Halide – உப்புரு
Chlorination – பாசியேற்றம்
Fluorescence – பாய்வொளிர்தல்

## முனைவர் மு. கண்ணன்

Neuromarketting – கரவு சந்தையுத்தி
Stress buster – மனவழுத்த முறிப்பான்
Sim swap – தரவுக்களவு / பேசிவழித் திருட்டு